# தர்மசக்கரம்





காளயுக்தி ௵ மார்கழி மீ சக்கரம் 27 ஆரம் 12

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை • 639 115 திருச்சி ஜில்லா.

# அந்தர்யோக விவரங்கள்

மதுரை ஜில்லா—உசிலம்பட்டியில் 17—12—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: நாடார் சரஸ்வதி உயர்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-25 செலுத்தி சீட்டுப்பெற்றுக் கொள்ளலாம்.

இராமநாதபுரம் ஜில்லா—பள்ளத்தூரில் 24—12—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ சாரதா சேவாச்ரமம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி குஹானந்தர்

உணவு வசதி: நேரில் ரூ. 1-25 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

கரூரில் 31—12—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: பசுபதிபாளையம் விவேகானந்த கல்வி நிலையம்

நேரம்: மாலை 6-00 மணிமுதல் 7-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 31—12—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: பெரியகாளி அம்மன் கோவில்

நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

மதுரை ஜில்லா—கம்பத்தில் 31—12—78 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீ முத்தையா பிள்ளை ஞாபகார்த்த உயர்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

உணவு வசதி: நேரில் பகல் உணவுக்கு ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக் கொள்ளலாம்.

தென் ஆற்காடு ஜில்லா—கடலூரில் 7—1—79 ஞாயிற்றுக்கிழமை

இடம்: ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகள் மடாலயம், சந்நிதி வீதி, திருப்பாதிரிப் புலியூர்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

மதுரை ஜில்லா—தேனியில் 17—1—79 புதன்கிழமை

இடம்: ஸ்ரீ கணேச கந்தபெருமாள் ஆலயம், தியாகராஜநகர்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | காளயுக்தி ௵ மார்கழி ௴ | ஆரம் 12 |
|---|---|---|




பொருளடக்கம் பக்கம்




## சந்தா விவரம்

**டிபாஸிட் சந்தா:** ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**ஆண்டு சந்தா:** ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**சகாய சந்தா:** தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**இலவச சந்தா:** தமிழக அரசாங்கத்தால் தமிழ்நாட்டில் 1445 பொது நூலகங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை அனைத்திற்கும் தர்ம சக்கரம் இவ்வாண்டு ஆவணிமாதம் முதல் தொடர்ந்து அன்பர்களின் உதவியால் இனமாக அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் தர்ம சக்கரம், திருப்பராய்த்துறை–639 115, திருச்சி மாவட்டம் என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப்பணி



தாயுமான சுவாமிகளின் சமாதிக்கோயிலுக்கருகில் மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாய் வாடகை கொடுத்து வீடு ஒன்று அமர்த்தப்பெற்றிருக்கிறது. இதில் நம் தபோவனத்தைச் சேர்ந்த சுவாமி பரானந்தரும், ஏனைய தொண்டர்களும் தங்கியிருந்துகொண்டு திருப்பணி வேலையைக் கவனித்து வருகிறார்கள். இதுகாறும் கோயிலுக்குரிய 2½ ஏக்கர் நிலத்தைக் குத்தகைக்குப் பயன்படுத்திவந்த குத்தகைக்காரன் இப்பொழுது இடம் மாறிப்போயுள்ளான். சமையல் கட்டுக் கட்டடம் இப்பொழுது துவக்கப்பெற்றிருக்கிறது. இது பூர்த்தியானதும் ஆச்ரமக் கட்டடவேலை துவக்கப்பெறும். அதன் பிறகே சமாதிக் கோயிலைத் திருத்தியமைக்கும் திருப்பணி வேலை துவக்கப்பெறும்.

## 1978 நவம்பர் மாத நன்கொடை விவரம்

| தேதி | விலாசம் | | | ரூபாய் |
|---|---|---|---|---|
| | அக்டோபர் மாதம் முடிய நன்கொடை | | | 34 970-23 |
| 1-11-78 | ஸ்ரீ V.S.K. துரைசாமிநாடார் M.A. | அரண்மனைக்காரத்தெரு | சென்னை | 501-00 |
| 2-11-78 | அமரர் T.K. சுருளியாண்டி கவுண்டர் | கம்பம் | மதுரைஜில்லா | 1 006-00 |
| | அமரர் ஸ்ரீ K. ராமராஜ் | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 250-00 |
| | ஸ்ரீமதி R.K.K. ருக்மணி அம்மாள் | ,, | ,, | 201-00 |
| | ஓர் அன்பர் | அம்பாசமுத்திரம் | திருநெல்வேலிஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ N. காமராஜ் | வடகரை | மதுரைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீமதி R. தாரணி ரவி | காமயக்கவுண்டன்பட்டி | ,, | 101-00 |
| | ஸ்ரீ N.K.S. வெங்கடேசன் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீமதி S.L.K.R.G. விமலா | புதுப்பட்டி | ,, | 101-00 |
| 3-11-78 | ஸ்ரீ V.P. கந்தசாமி & K. நாகமணி | விருதுநகர் | | 1 006-00 |
| | ஸ்ரீமதி S. வாணிசந்தனகுமார் | கூடலூர் | மதுரை ஜில்லா | 501-00 |
| | ஸ்ரீ R. ராமசாமி | சேர்வலார்ஸ்கீம் | திருநெல்வேலி ஜில்லா | 150-00 |
| | ஸ்ரீ S.S. ஜெயகணேசன் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரை ஜில்லா | 109-00 |
| | அமரர் ஸ்ரீ S. சிக்கையா கவுடர் | ,, | ,, | 101-00 |
| | அமரர் ஸ்ரீமதி கௌரி | ,, | ,, | 101-00 |
| 4-11-78 | ஸ்ரீமதி G. ஆனந்தி | களமசேரி | கேரளா | 201-00 |
| | ஸ்ரீமதி S. பர்வதம் | கரூர் | திருச்சி ஜில்லா | 200-00 |
| | ஓர் அன்பர் | செட்டிநாடு | இராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ அ.வே. திருகூடபதியாபிள்ளை பர்ம் | கடயம் | திருநெல்வேலி ஜில்லா | 100-00 |
| 6-11-78 | ஓர் அன்பர் | பெஸன்ட்நகர் | சென்னை | 100-00 |
| 7-11-78 | ஸ்ரீ V.P. சிவசுப்பிரமணியன் | விருதுநகர் | | 106-00 |
| 8-11-78 | ஓர் அன்பர் | தாத்தையங்கார்பேட்டை | திருச்சிஜில்லா | 101-00 |
| | ஓர் பக்தை | மேச்சேரி | ,, | 101-00 |
| 10-11-78 | ஸ்ரீ S.K.S. ராஜமணி நாடார் | தூத்துக்குடி | திருநெல்வேலி ஜில்லா | 250-00 |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஸ்ரீ R. கனகசபை | தூத்துக்குடி | திருநெல்வேலி ஜில்லா | 250-00 |
| | ஸ்ரீமதி K. பிரபாவதி | ,, | ,, | 250-00 |
| | ஸ்ரீ K. விவேகானந்தன் | ,, | ,, | 250-00 |
| | ஸ்ரீ R. சண்முகசுந்தரம் | ,, | ,, | 250-00 |
| | ஸ்ரீமதி S. விஜயலக்ஷ்மி | ,, | ,, | 250-00 |
| | செல்வி K.A. மீனு | ,, | ,, | 250-00 |
| | செல்வி V. மஹேஸ்வரி | ,, | ,, | 250-00 |
| | ஆசிரியர் & ஆசிரியைகள் கஸ்தூரிபாய் நடுநிலைப்பள்ளி | காமயக்கவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 225-00 |
| 11-11-78 | ஸ்ரீ நடராஜா நூற்பு ஆலை | திருப்பூர்-2 | கோவைஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ M. நஞ்சப்பா செட்டியார் | முத்துக்கவுண்டன்புதூர் | ,, | 101-00 |
| | ஸ்ரீ R. கோவிந்தசாமி செட்டியார் & சன்ஸ் | கோபாலபுரம் | ,, | 101-00 |
| 13-11-78 | ஆசிரியர்கள் சங்கம் அரசினர் உயர்நிலைப்பள்ளி | காமயக்கவுண்டன்பட்டி | மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ C.K. வேணுகோபால் செட்டி, | நைனியப்பநாயக்கன் தெரு | சென்னை | 101-00 |
| | ஓர் அன்பர் | திருவண்ணாமலை | வடஆற்காடு ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ V. பெருமாள் | காமயக்கவுண்டன்பட்டி | மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ R. நடேசன் | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ V.K. கணபதி B. A., B. T. | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ E. ஆனந்த குமார் | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ E. பார்த்திபன் | ,, | ,, | 100-00 |
| | ஓர் அன்பர் | வீரபாண்டி | சேலம் ஜில்லா | 100-00 |
| 14-11-78 | ஆசிரியர்கள் | ஸ்ரீ சாரதா பாலமந்திர் உதவிப்பள்ளி | சேலம் | 115-00 |
| | ஓர் அன்பர் | சிவகாசி | ராமநாதபுரம் ஜில்லா | 100-00 |
| 15-11-78 | ஸ்ரீ S. காசிவிஸ்வநாதன் | கரூர் | திருச்சி ஜில்லா | 1 008-00 |
| | ஸ்ரீ சங்கரர் வேதாந்த சன்மார்க்க மாதர்கள் சங்கம் | காமயக்கவுண்டன்பட்டி, | மதுரை ஜில்லா | 282-00 |
| | நியூ விஜயலக்ஷ்மி ஹால் | வெங்கல கடைதெரு | மதுரை | 251-00 |
| | ஆசிரியர்கள் கம்பம் பஞ்சாயத்து யூனியன் நடுநிலைப்பள்ளி, | காமயக்கவுண்டன்பட்டி, | மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ K. சுப்பிரமணியன் B. A. | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ S.K. பொன்னையா பிள்ளை | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ K. முத்துமல்லா ரெட்டியார் | கீழ்கவரப்பட்டு | தென்ஆற்காடு | 101-00 |
| 17-11-78 | M/s. S. பெருமாள் முதலியார், | P. B. No. 78. | சேலம் | 3 000-00 |
| 19-11-78 | ஸ்ரீ M. சுருளி வேலுச்சாமி | கம்பம் | மதுரை ஜில்லா | 100-00 |
| 20-11-78 | M/s. பிரிலியண்ட் சால்ட் டிரேடிங் கம்பெனி, | தூத்துக்குடி | திருநெல்வேலி | 500-00 |
| | M/s. C. சண்முகக்கனி & பிரதர்ஸ் | ,, | ,, | 250-00 |
| | ஓர் அன்பர் | ஈரோடு | கோவை ஜில்லா | 100-00 |
| 21-11-78 | ஸ்ரீ N.M.R. சுப்பராமன் | சொக்கிகுளம் | மதுரை | 1 000-00 |
| | ஸ்ரீ R. முருகையன் | பச்சாம்பாளையம் | கோவை ஜில்லா | 251-00 |
| | ஸ்ரீ A. கந்தசாமி | காவேரிப்பட்டணம் | தர்மபுரி ஜில்லா | 250-00 |
| | ஸ்ரீமதி K. மீனாக்ஷி அம்மாள் | விருதுநகர் | | 201-00 |
| | ஸ்ரீ G. திருமலைகோனேரி பிள்ளை | கம்பம் | மதுரை ஜில்லா | 151-00 |

| | | | | |
|---|---|---|---|---|
| | ஸ்ரீமதி M.S.S N. ராஜாத்தி அம்மாள் | விருதுநகர் | | 101-00 |
| | ஸ்ரீ S.R. சாமிக்காளை நாடார். | தேனி | மதுரை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ M.S.S.V. சங்கரலிங்கம் செட்டியார் | கோவில்பட்டி | திருநெல்வேலி | 101-00 |
| | ஓர் அன்பர் | ஜாரிகொண்டாலம்பட்டி | சேலம் -- 10. | 100-00 |
| 22-11-78 | ஸ்ரீ A.L. சுப்பிரமணிய செட்டியார் | சொக்கலிங்கபுரம் | மதுரை ஜில்லா | 200-00 |
| | ஸ்ரீ R.M. சுப்பையா கவுண்டர் | முருகநாதபுரம் கரூர் | திருச்சி ஜில்லா | 101-00 |
| 22-11-78 | ஸ்ரீ P. தங்கராசு, மானேஜர், L.G. பாலகிருஷ்ணன்&பிரதர்ஸ் கரூர் | | திருச்சி ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ J. நல்லுசாமி ரெட்டியார் | தில்லைநகர் | திருச்சிராப்பள்ளி | 101-00 |
| | ஸ்ரீ S.M.R.M. அடைக்கலவன் செட்டியார் | ராசிபுரம் | சேலம் ஜில்லா | 101-00 |
| 23-11-78 | ஸ்ரீK.R.M.V.பொன்னுசாமிநாடார் | தூத்துக்குடி | திருநெல்வேலி ஜில்லா | 300-00 |
| | ஸ்ரீ S. சந்தோஷ நாடார் | கொம்மடிகோட்டை | ,, | 101-00 |
| | ஸ்ரீ K. சந்திரசேகரன் & P.K. சீனிவாசன் | செவ்வாய்பேட்டை | சேலம்-2 | 101-00 |
| 24-11-78 | ஸ்ரீ N. M. கிருஷ்ணன் | லக்ஷ்மிபுரம் | மதுரை | 105-00 |
| | ஸ்ரீ N. விட்டல் | கீழ்கவ்வட்டி | நீலகிரி ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ மு. உ. மல்லைய்யா சர்மா | சொக்கலிங்கபுரம் | ராமநாதபுரம் ஜில்லா | 100-00 |
| 27-11-78 | ஸ்ரீ கோபால்டு டெக்ஸ்டைல்ஸ் (பி)லிட், | திருப்பூர் | கோவை ஜில்லா | 250-00 |
| | ஸ்ரீ P. அழகு தேவர் | ராஜபாளையம் | ராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ S. லோகராஜு | திருப்பூர் | கோவை ஜில்லா | 101-00 |
| | நியு யுனைடெட் பனியன் கம்பெனி | ,, | ,, | 101-00 |
| | ஸ்ரீ T.R. சுவாமிநாதமுதலியார் | ,, | ,, | 100-00 |
| | ஓர் அன்பர் | ,, | ,, | 100-00 |
| 28-11-78 | ஸ்ரீமதி P.T.D. கமலம்மாள் | கோம்பை | மதுரை ஜில்லா | 501-00 |
| | குமாரி C.R. சகுந்தலா M.O.L. உதவி பிரின்ஸ்பால் | ஸ்ரீ சாரதா கல்லூரி | சேலம்-4 | 251-00 |
| | ஸ்ரீமதி R. லலிதா B.A. (Hons) M.A. | ஸ்ரீ சாரதா கல்லூரி | ,, | 101-00 |
| | ஸ்ரீ V. கணேசன் A.C.T.O. | மீனாக்ஷிநகர் P. No. 60 | சேலம்-7 | 100-00 |
| | ஸ்ரீ ம.பா.வெ. அய்யனார் ராஜா | ராஜபாளையம் (டிக்கெட் வசூல் மூலம்) | ராமநாதபுரம் ஜில்லா | 100-00 |
| | ஸ்ரீமதி ம. அ. பாஞ்சாலியம்மாள் | ராஜபாளையம் | ,, | 100-00 |
| | ஸ்ரீ ம. அ. சுப்பிரமணிய ராஜா | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ ம. அ. ராதாகிருஷ்ண ராஜா | ,, | ,, | 100-00 |
| | ஸ்ரீ ம. அ. சந்திரசேகர ராஜா | ,, | ,, | 100-00 |
| | M/s N. S. ராமசாமி ராஜா & Co. | ,, | ,, | 200-00 |
| | ஸ்ரீ V. பாப்பு ராஜா | கோவில்பட்டி | ,, | 100-00 |
| | ஸ்ரீ ம. ரா. அழகர் ராஜா | அம்பாசமுத்திரம் | திருநெல்வேலி ஜில்லா | 100-00 |
| | ஸ்ரீ K.N. நாராயண ராஜா | ராஜபாளையம் | ராமநாதபுரம் ஜில்லா | 100-00 |
| | ஸ்ரீ N. ராஜகோபாலன் B.A.B.L. | | திருநெல்வேலி ஜில்லா | 100-00 |
| 29-11-78 | ஸ்ரீ M. மணி | தூத்துக்குடி | ,, | 400-00 |
| | ஸ்ரீ M. செந்தில் | ,, | ,, | 400-00 |
| | ஸ்ரீ அரசன் சுப்பையா M.com. | ,, | ,, | 250-00 |
| | குமாரி மீனு | ,, | ,, | 200-00 |
| | | | ரூ. 100க்குக் கீழ் வந்த நன்கொடை மொத்தம் | 6768-77 |
| | | | ஆக மொத்தம் ரூ. | 64448-00 |

# தர்ம சக்கரம்

சக்கரம் 27 பிங்கள ௵ தை—காளயுக்தி ௵ மார்கழி

1978



प्रज्ञानं ब्रह्म

எழுமின் விழிமின் செந்நெறி சார்மின்

ஆசிரியர்
சுவாமி நித்தியானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை—639 115 திருச்சி ஜில்லா

## பொருளடக்கம்

---





# தர்ம சக்கரம்

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.*


சக்கரம் 27 | காளயுக்தி ஹு மார்கழி மீ | ஆரம் 12


## பிரார்த்தனை

निरासकस्यापि न तावदुत्सहे महेश हातुं तव पादपङ्कजम् ।
रुषा निरस्तोऽपि शिशुः स्तनन्धयः न जातु मातुश्चरणौ जिहासति ॥

— यमुनाचार्यः

*நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே*
*மகேச ஹாதும் தவ பாதபங்கஜம் ।*
*ருஷா நிரஸ்தோऽபி சிசு: ஸ்தனந்தய:*
*ந ஜாது மாதுஸ்சரணௌ ஜிஹாஸதி ॥*

— *யமுனசார்யர்*

பால் அருந்தும் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்த தாய் கோபித்துக்கொண்டு அதைப் புறக்கணித்தாலும் குழந்தை தாயை விட்டுப் பிரிவதில்லை. அது போன்று பெரிய பொருளே! நீ என்னைப் புறக்கணித்தாலும் நான் உன்னுடைய தாமரைத் திருவடிகளினின்று விலகேன்.

**பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ**
**புகலிடம் பிறிது முண்டோ**

— *தாயுமானவர்*

# அருள் விருந்து



அரும்பெரும் செயல்கள் அமைதியில் வடிவெடுக்கின்றன.

ஆத்ம சாதனம் மனிதனை மேலோனாகத் திருத்தியமைக்கிறது.

நல்லான் ஒருவனை நல்வாழ்வினின்று பிரித்தெடுக்க முடியாது.

நல்லான் ஒருவன் இயற்கையின் பேரியல்போடு ஒட்டி ஒழுகுகிறான்.

சொன்னசொல் தவறுகிறவன் சத்தியத்தினின்று தவறியவன் ஆகிறான்.

ஒழுக்கத்தினின்று பிரித்தெடுக்கப்படுகிற வாழ்வு போற்றுதற்குரியதாகாது.

சில சந்தர்ப்பங்களில் மௌனம் சாதிப்பதில் பெரும் நலன் உண்டாகிறது.

அடக்கமும் ஒடுக்கமும் எளிமையும் படைத்திருப்பவனிடம் தெய்விகம் ஓங்குகிறது.

சீலம் படைத்திருப்பவனுடைய சொல் யாருக்கும் கசப்பை உண்டுபண்ணுவதில்லை.

நல்லறிவு படைத்திருக்கிறவன் வாழ்வுக்கு நல்ல ஆதரவு தேடிக்கொண்டவன் ஆகிறான்.

இன்பம் நல்வாழ்வினின்று உருவெடுக்கிறது. நல்வாழ்வோ உழைப்பினின்று உருவெடுக்கிறது.

மனிதனுடைய சிற்றியல்பு ஆயாசத்தை உண்டுபண்ணுகிறது. அவனுடைய பேரியல்பு ஆற்றலை வளர்க்கிறது.

விழல்போன்று தீமை வளர்கிறது. பின்பு விழல் வெட்டப்படுவதுபோன்று தீமையும் தகர்த்தொழிக்கப்படுகிறது.

பெருவெள்ளம் குடிசிலைத் தூக்கிக்கொண்டு போகிறது. அங்ஙனம் வரம்பு கடந்த சுகபோகம் ஆளை ஒழிக்கிறது.

அறியாமையினால் இன்ன பாபத்தை நான் செய்துவிட்டேன் என்று ஒத்துக்கொள்ளுகிறவன் அக்கணமே அப்பாபத்தினின்று விடுபட்டவன் ஆகிறான்.

சேற்றில் வளர்வதை முன்னிட்டுத் தாமரைப்பூ ஒதுக்கிவைக்கப் படுவதில்லை. அங்ஙனம் உலகுக்குப் பயன்படுபவனை அவனுடைய குணக்கேட்டை முன்னிட்டுப் புறக்கணிக்க வேண்டாம்.



### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

மகிமசரன்: "ஈசுவரானுபூதியைப் பெறுவதற்கு ஆத்ம சாதகன் எங்ஙனம் வினையாற்ற வேண்டும்?"

பரமஹம்சதேவர்: "ஈசுவரானுபூதியைப் பெறுவதற்கு இத்தகைய கடமையைச் செய்ய வேண்டும், அத்தகைய கடமையைச் செய்ய வேண்டும் என்னும் கோட்பாடுகளெல்லாம் பொருளற்றவைகள். தனக்கு வாய்த்துள்ள எக்கருமத்தை வேண்டுமென்றாலும் ஆத்ம சாதகன் பக்திபூர்வமாகப் பண்ணலாம். தான் புரிகின்ற பணிவிடைகள் யாவையும் ஈசுவர ஆராதனையாக அவன் கருதவேண்டும். உலகக் கிருத்தியங்களை ஒப்பந்தங்களுக்கு உட்பட்டு மக்கள் செய்து முடிக்கின்றனர். கடவுள் காட்சிக்கோ ஒப்பந்தம் ஏதுமில்லை. பக்தியுடனும், பணிவுடனும், பகவானுடைய அருளை நாடி பக்தன் காத்திருக்கவேண்டும். பக்தன் ஒருவனுடைய தகைமையைப் பகவான் அறிகிறார். கிருபைகூர்ந்து என்றைக்கு அவர் தமது திவ்விய காட்சியைக் கொடுத்தருளுகின்றாரோ அதுவரையில் பக்தன் ஆர்வத்தோடு காத்திருக்கக்கடமைப்பட்டிருக்கின்றான். தனக்கு ஏற்பட்டுள்ள அறச்செயல்களை மட்டும் அவன் ஒருபொழுதும் நிறுத்திவிடலாகாது. அருள்நாட்டம் பக்தனிடத்து ஸ்திரமாக அமைந்திருக்குமாகில் பகவத் கிருபைக்கு அவன் நிச்சயமாக இலக்கு ஆவான்.

"ஈசனுடைய அருளைப் பெறுவதற்குப் பொருத்தமான நிபந்தனைகள் சில உள. சாதகன் ஒருவன் சத் சங்கத்தை நாடவேண்டும். கடவுள் நாட்டம் எது? உலக நாட்டம் எது? என்பதை அவன் பாகுபடுத்த வேண்டும். சான்றோர் ஒருவருடைய அனுக்ரஹத்துக்கு அவன் இலக்கு ஆகவேண்டும். இச்செயல்கள் இறைவனுடைய அருளுக்கு முன்னோடிகளாக வந்து வாய்க்கின்றன. அவனுடைய குடும்பக் கடமைகள் யாவையும் நிர்வகிப்பதற்கு அவனுடைய தமையன் ஒருவனே முன் வந்து நிற்கலாம். அவனுடைய மனைவியே கற்பும், கடவுள் நாட்டமும் வாய்க்கப் பெற்றவளாக அமையலாம். இன்னும் சில வேளைகளில் விவாகம் ஆவதற்கு முன்பே சாதகனொருவனுக்கு அருள் நாட்டம் ஏராளமாக அமைப்லாம். அதன் விளைவாக விவாகம் பண்ணிக் கொள்வதினின்று அவன் விலகிக்கொள்கின்றான். இங்ஙனம் சூழ்நிலைகள் யாவும் அனுகூலமாக வாய்க்குங்கால் பரபோதம் அவனுக்குத் தெய்வாதீனமாக ஏற்படுகிறது.

"குடும்பம் ஒன்றிலே ஆடவன் ஒருவன் கொடிய நோய்க்கு ஆளாகிப் படுத்துக் கிடக்கிறான். மரணத்தினின்று அவன் தப்பித்துக் கொள்ளுவது சந்தேகம். அத்தகைய நெருக்கடியில் வைத்தியன் ஒருவன் வந்து சேருகிறான். அவன் இயம்புவதாவது: 'இதோ சிகிச்சை ஒன்று உளது. சுவாதி நட்சத்திரம் உச்சத்திலிருக்கிற பொழுது மழைபெய்ய வேண்டும். அது முதல் நிபந்தனை. அந்த மழை நீரில் கொஞ்சம் ஸ்மசானத்தில் கிடக்கும் மானுட கபாலம் ஒன்றில் படியவேண்டும். அடுத்தபடியாகத் தவளை ஒன்று தாவித் தாவி அந்த இடத்துக்கு வரவேண்டும். மூன்றாவதாக நல்லபாம்பு ஒன்று அதைத் துரத்திக் கொண்டு வரவேண்டும். நான்காவதாகப் பாம்பு அதைப் பிடிக்க எத்தனிக்கின்ற பொழுது தவளை எட்டிக் குதித்துத் தப்பித்துக் கொள்ளவேண்டும். பாம்பு எடுத்துக்கொண்ட முயற்சியின் விளைவாக அதன் பல்லினின்று ஒரு துளி விஷம் கபாலத்துக்குள் விழவேண்டும். ஐந்தாவதாக விஷம் தோய்ந்த நீரினின்று மருந்து ஒன்று ஆயத்தப்படுத்தி நோயாளிக்குத் தரவேண்டும். இந்த நிபந்தனைகளை நிறைவேற்றினால் நோயாளி பிழைத்துக் கொள்வான்.' வீட்டுத் தலைவன் பஞ்சாங்கம் பார்த்து சுவாதி நட்சத்திரம் உச்சத்துக்கு வருகிற நாளன்று வெளியே புறப்பட்டான். ஸ்மசானத்தில் கபாலம் எங்கே கிடைக்கும் என்று ஆவலோடு தேடினான். தன்னுடைய முயற்சி வெற்றிபெற வேண்டுமென்று தெய்வத்திடத்துப் பிரார்த்தனை பண்ணினான். அவன் தேடியலைந்து கொண்டிருந்த பொழுது

தற்செயலாகத் தரையின் மீது கபாலம் ஒன்றைக் கண்டான். சிறிது நேரத்தில் மழைபெய்ய ஆரம்பித்தது. அப்பொழுது அம்மனிதன் இயம்பியதாவது: 'கருணைகரக் கடவுளே, சுவாதி நட்சத்திரம் ஓங்கியிருக் கிறவேளையில் மழைநீர் கபாலத்தில் வீழ்ந் திருப்பது எனக்கு அனுகூலமாக அமைந் திருக்கிறது. அடுத்தபடியாகத் தவளையையும் பாம்பையும் பரமனே நீதான் கொண்டு வந்து சேர்க்கவேண்டும்.' ஆர்வத்தோடு அவன் இங்ஙனம் எண்ணிக்கொண்டிருந்தான். நல்லவேளையாக நச்சுப்பாம்பு ஒன்று அங்கு நகர்ந்து கொண்டு வந்தது. அம்மனிதன் அடைந்த ஆனந்தத்திற்கு அளவில்லை. உணர்ச்சியின் வேகத்தால் தன் ஹிருதயம் துடித்துக் கொண்டிருந்ததைத் தானே உணர்ந் தான். அவன் பிரார்த்தித்ததாவது: 'இறைவா இதோ பாம்பு வந்து விட்டது. நான் பெற வேண்டியவைகளுள் பெரும் பகுதி உன் அருளால் அமைந்திருக்கின்றன. பாக்கியிருக் கின்ற நிபந்தனைகளை நிறைவேற்றி வைப்பா யாக.' இங்ஙனம் அம்மனிதன் ஆர்வத்துடன் பிரார்த்தனை பண்ணியபொழுது தவளை ஒன்று குதித்துக் குதித்து அங்கு வந்தது. பாம்பும் அதைப் பின்பற்றியது. கபாலத்தருகில் தவ ளையைக் கௌவிப் பிடிக்கப் பாம்பு முயன்ற பொழுது அது கபாலத்தைத் தாண்டித் தப்பித் தோடியது. பாம்பு எடுத்துக் கொண்ட முயற்சியின் விளைவாக அதன் பல்லினின்று விஷம் சிறிது கபாலத்திலிருந்த மழை நீரில் வீழ்ந்தது. இங்ஙனம் தெய்வாதீனமாக நிபந் தனைகள் யாவும் தொடர்ந்து நிறைவேறின. அதைப் பார்த்த மனிதன் கைகொட்டிக் கொண்டு இறைவனைப் போற்றி ஆடினன். பிரார்த்தனையின் மூலம் அரியபெரிய செயல் கள் பல யாண்டும் நிகழ்கின்றன. பிரார்த் தனை பண்ணுகிறவன் மட்டும் தகுதிவாய்ந்தவ ஞக இருக்கவேண்டும். அன்னவன் பொருத்த மாகப் பிரார்த்தனை பண்ணவேண்டும். மனக் கசிவுடன் பண்ணுகிற பிரார்த்தனை பயனளிக் கிறது.

''ஈசுவரானுபூதி பெற விரும்புகிற ஒருவன் உலக ஆசைகளையெல்லாம் தன் மனதினின்று ஒதுக்கித் தள்ளவேண்டும். உலக ஆசையும் கடவுள் நாட்டமும் சேர்ந்து வாய்க்கமாட்டா. சாது ஒருவன் நாளைக்கு என்று எதையும் தேடி வைக்கலாகாது. பறவைகளும், தேச சஞ்சா ரம் செய்யும் சாதுக்களும் அடுத்த நாள் உப யோகத்துக்காகவென்று எதையும் தேடி வைப்பதில்லை. என்னுடைய மனப்பான்மை யும் அத்தகையது. எதிர்கால உபயோகத் துக்காகவென்று மண்ணுங்கட்டியைக் கூட நான் கையால் எடுக்கமுடியாது. ஏதோ பொருள் ஒன்றைப் பாதுகாத்து வைக்க வேண்டுமென்று முன்பு ஒரு தடவை ஹிரு தயன் என்னை உபத்திரவப்படுத்தினன். ஆனல் அங்ஙனம் செய்ய என்மனம் இடம் கொடுக்கவில்லை. காசிக்குப் போய்விடலாமா? என்று எண்ணினேன். இரண்டு மூன்று துணிமணிகளை எடுத்துக்கொண்டு கிளம்பலாம் என்று எண்ணினேன். ஆனல் நான் பணத்தை எப்படித் தீண்டமுடியும்? ஆகவே காசிக்குப் போகும் எண்ணத்தை நான் தவிர்த்துவிட் டேன். (எல்லாரும் நகைக்கின்றனர்)

(மகிமசரணைப் பார்த்து) ''நீ இல்வாழ்வு வாழ்ந்து வருகின்ருய். ஆதலால் இரண்டும் உனக்குத் தேவை. உலகப் பொருள்களை நீ தேடவேண்டும்;கடவுளையும் நீநாடவேண்டும்.''

மகிமசரண்: ''ஐயனே கடவுள் நாட்டம் பூண்டிருக்கிற ஒருவன் உலக நாட்டம் பூணு வது பொருந்துமா?''

பரமஹம்சதேவர்: ''முன்பு ஒருநாள் கங் கைக் கரையோரம் நின்றுகொண்டு ஒரு கையில் காசையும் மற்ரெரு கையில் மண்ணை யும் எடுத்துக்கொண்டு நான் விசாரம் பண்ணி னேன். பொன்னே மண்; மண்ணே பொன். இன்றைக்குப் பொன்னுக இருப்பது மற்ரெரு நாள் மண்ணுவது திண்ணம். இங்ஙனம் சங்கல் பித்துக்கொண்டு இரண்டு கரங்களிலும் இருந் தவைகளைக் கங்கைக்குள் வீசி எறிந்தேன். பின்பு எனக்கு அச்சத்தோடு கூடிய எண்ண மொன்று உண்டாயிற்று. நான் எண்ணியதா வது:

'இலட்சுமிதேவியை நான் அலட்சியப் படுத்திவிட்டேன் அல்லவா! அப்படிச் செய்தது என் மடமை அல்லவா! மேலும் நான் எண்ணி யதாவது; உலகுக்கு உணவூட்டுகிற அன்னை பராசக்தி எனக்கு வழங்குகிற உணவை

நிறுத்திவிட்டால் என் கதி என்னவது? பின்பு ஹாஸரா செய்தது போன்று நான் ஒரு தந்திரத்தைக் கையாண்டேன். இலட்சுமிதேவியிடம் 'தாயே நீ என் உள்ளத்தில் குடியிருப்பாயாக' என்று பிரார்த்தித்தேன். முன்பொருகால் மானுடனொருவன் கடும் தவம் புரிந்தான். அது அன்னை பராசக்திக்கு மகிழ்ச்சியை ஊட்டியது. 'மகனே நீ விரும்புகிற வரம் ஒன்றைக்கேள்' என அம்பிகை அவனுக்கு இயம்பினள். அம்மனிதனே, 'என் தாயே, உன் திருவுளம் அங்ஙனம் இருக்குமாயின் என் பேரப்பிள்ளைகளோடு பொன் தட்டில் உணவு உண்ணும்படி நீ அனுக்ரகம் பண்ணுவாயாக' என்று வேண்டினன். அம்மனிதன் கையாண்ட முறையை எண்ணிப்பாருங்கள். ஒரே வேண்டுதலில் அவன் பேரப்பிள்ளைகள், பணம் பொன்தட்டு ஆகிய அனைத்தையும் அடக்கி விட்டான். (எல்லாரும் நகைக்கின்றனர்.)

"மனதினின்று காமமும், காசு ஆசையும் அகன்று போய்விடுமாயின் அம்மனதை முழுதும் தெய்வத்திடத்துத் திருப்பலாம். அப்பொழுது மனம் முழுதும் தெய்வச் சிந்தனையில் மூழ்கிவிடுகிறது. தெய்வச் சிந்தனையினின்று மனது எப்பொழுது பிசகுகிறதோ அப்பொழுதே அதற்கு உலக பந்தபாசம் வந்து அமைகிறது. தராசிலுள்ள முள் ஆனது நடுநிலையை விட்டு எப்பொழுது பிசகுகிறது தெரியுமா? ஏதேனும் ஒரு தட்டில் எடை அதிகமானல் அப்பக்கத்தில் தராசின் முள் சாய்கிறது. அதே பாங்கில் மனதுக்குத் தெய்வப்பற்றைவிட உலகப்பற்று அதிகமானல் அப்பக்கத்தில் மனமும் சாய்கிறது. காமமும் காசு ஆசையுமே உலகப்பற்று என இயம்பப்படுகின்றன.

"தாயின்கர்ப்பத்தினின்று குழந்தைபிரசவம் ஆனவுடனே அது அழுகிறது. ஏன் அது அழுகிறது தெரியுமா? தன் அழுகையின் மூலமாக நான் இப்பொழுது எங்கே வந்திருக்கிறேன்? தாயின் கர்ப்பத்தில் இருந்தபொழுது நான் கடவுளின் தாமரைத் திருவடிகளைத் தியானித்துக்கொண்டிருந்தேன். ஆனல் இப்பொழுது நான் இருக்குமிடம் யாது? என்று தன் மனதைக் கேட்டுக்கொண்டு அது அழுகிறது.

(மகிமசரணைப் பார்த்து) "மனப்பற்று உன் உள்ளத்தினின்று ஒதுங்கிப்போவது அவசியம். குடும்பி ஒருவனுடைய வாழ்க்கையை வாழ நீ கடமைப்பட்டிருக்கின்றாய். ஆனல் பற்றற்றவனாக வாழ்ந்துகொண்டிரு."

மகிமசரண்: "கடவுள் நாட்டத்தில் கருத்தைச் செலுத்தியிருக்கிற ஒருவன் உலக வாழ்க்கையில் ஈடுபடவல்லவனாவானா?"

பரமஹம்சதேவர்: "ஏன் வல்லவனாகமாட்டான்? உலகை விட்டு விட்டு அவன் எங்கே செல்லுவான். நான் எங்கே வசித்திருந்தாலும் ராமனுடைய அயோத்தியிலேயே யாண்டும் வசித்திருக்கிறேன் என்று நான் நன்கு உணருகிறேன். இவ்வுலக முழுதும் ராமனுக்குரிய அயோத்தியாகும். வசிஷ்டரிடமிருந்து ராமன் ஞான உபதேசம் பெற்றான பிறகு அவன் உலகைத் துறந்து விடுவதாகத் தீர்மானித்தான். அவனுடைய மனப்பான்மையைச் சரிப்படுத்தும்படி தசரதமன்னன் வசிஷ்டரிடம் வேண்டிக்கொண்டார். வசிஷ்டர் ராமனிடம் இயம்பியதாவது: ராமா என்னுடன் கூடிச் சிறிது ஆராய்ச்சி செய்துபார். பிறகு நீ உலகைத் துறந்துவிடலாம். இவ்வுலகம் கடவுளுக்குப் புறம்பானதாக இருக்கிறதா? இக்கோட்பாட்டைச் சிறிது சிந்தித்துப்பார். இவ்வுலகம் பரம்பொருளுக்குப் புறம்பானது என உனக்குத் தோன்றினல் இவ்வுலகை நீ துறந்துவிடலாம்! ராமன் சிந்தித்துப் பார்த்தான். பரம்பொருள் ஒருவரே பிரபஞ்சமும், அதிலுள்ள உயிர் வகைகளும் ஆக இலங்கிக்கொண்டிருக்கிறார். கடவுளின் சாந்நித்தியம் இவையாவுக்கும் அடிப்படையில் இருப்பதால் இவையாவும் மெய்ப்பொருள் போன்றே தென்படுகின்றன. ஆக இவ்வுலகம் பரமனுக்குப் புறம்பானதன்று. இங்ஙனம் உணர்ந்த ராமன் மௌனமுற்று இருந்தான்.

"காமம், குரோதம் போன்ற கீழான இயல்புகளை எதிர்த்து இவ்வுலகில் மனிதன் பெரும்போர் புரியவேண்டும். பல ஆசைகள் பொல்லாதவைகள். அவைகளை அறவே அகத்தினின்று ஒதுக்கித் தள்ளவேண்டும். பற்றுதலும் பொல்லாதது. எவ்விதத்திலும் உள்ளத்தில் அதற்கு இடம் கொடுக்கலாகாது."

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

368. உள்ளக் கொதிப்பகல
வுள்ளுள்ளே ஆனந்த
வெள்ள மலர்க்கருணை
வேண்டும் பராபரமே.

உள்ளம்அல்லது மனதுக்குப் புறத்தில் சின்னமாய் அமைந்திருப்பது மானசஸரோவரம். மனோதத்துவத்தை விளக்கும் தடாகம் என்பது இதன் பொருள். இத்தடாகம் கயிலயங்கிரிக்குத் தென்பக்கத்திலிருக்கிறது. காற்று அடிக்கிறபொழுது இத்தடாகத்தில் அலைகள் வடிவெடுக்கின்றன. அப்பொழுது கயிலயங்கிரியின் பிம்பமோ தடாகத்தின் அடிப்பாகத்தில் உள்ள மணலோ தென்படுவதில்லை. அதேவிதத்தில் ஆசையினால் தூண்டப்பெற்று உள்ளத்தில் கொதிப்பு உண்டாவதால் மனிதன் துயரத்துக்கு ஆளாகிறான். அவனுக்குச் சொந்தமாயுள்ள ஆனந்தம் அப்பொழுது மறைந்து கிடக்கிறது. ஆனால் எப்பொழுதெல்லாம் உள்ளத்தில் துடிப்பு அடங்குகிறதோ அப்பொழுதெல்லாம் ஆனந்தம் தானாக மிளிர்கிறது. யாண்டும் கொதிப்பற்ற நிலையில் மனிதன் தன் மனதை வைத்திருக்க முடியும். ஆசையை அகற்றுதற்கேற்ப ஆனந்தம் தானாகத் திகழுகிறது. அத்தகைய ஆனந்தத்தில் நிலைத்திருக்கும் ஆத்ம சாதகனுடைய அந்தக்கரணத்தில் இறைவனுடைய திருவருள் தானாக மலர்கிறது. அத்தகைய பெருநிலை இறையே எனக்கு வேண்டும் என்பதே இக்கண்ணியின் உட்பொருள்.

369. என்னைப் புரப்பது
அருளின் கடனும் என்கடனும்
நின்னிற் பணியறவே
நிற்கை பராபரமே.

ஆத்மசாதகனுக்கு ஜீவபோதம் இருக்கிறவரையில் அதை இறைவனுடைய திருத்தொண்டிற்கென்றே பயன்படுத்தலாம். அப்படி அண்ணலின் பொருட்டுப் பயன்படுத்துதலில் ஆத்ம சாதகன் பரமானந்தமடைகின்றான். ஜீவவியக்தியைக் கலைத்துத் தள்ளுதலில் அவன் நாட்டம் வைப்பதில்லை. இறைவன் பணியின் பொருட்டே தன்னுடைய ஜீவவியக்தி நிலைத்திருக்கட்டும் என்று அவன் இறைவனிடம் பிரார்த்திக்கின்றான். இத்தகைய மனநிலையில் ஊறியிருப்பவனுக்குப் பிறவிப் பெருங்கடல் ஒருபொழுதும் துன்பத்தை விளைவிக்காது. ஆண்டவனுக்கு அரும்பணிபுரிந்து இன்புற்றிருக்கும் அடியவன் இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று உணர்ந்துகொண்டு பரவசத்தில் தோய்ந்திருக்கின்றான். இது துவைத பாவனையின் உச்சநிலையாம். இத்தகைய பெருநிலையில் இருப்பதில் நல்ல சாதகன் ஒருவனுக்கு ஆர்வம் மிக உண்டாகிறது என்பது இக்கண்ணியின் கருத்து.

370. தானேயாம் நன்னிலையைத்
தந்தஅருள் ஆனந்த
வானே மனாதீத
வாழ்வே பராபரமே.

மனதுக்கு உட்பட்ட வாழ்வெல்லாம் பிரபஞ்ச வாழ்வாகிறது. பிரபஞ்ச வாழ்வில் இன்பமும், துன்பமும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. துன்பம் கலவாத இன்பம் இவ்வையக வாழ்வில் இல்லை. மனம் போன இடத்தோ ஆனந்த சொரூபமாகிய சிதாகாசமே எஞ்சியிருக்கிறது. அதில் தோய்ந்திருப்பது ஜீவாத்மனுடைய நிஜநிலையாகிறது. அதை உறுதியாகப் பெறுவதே வீடுபேறு ஆகிறது. முக்திநிலை ஒன்றுதான் நல்லநிலை என இயம்பப் பெறுகிறது. பந்தபாசநிலை ஒருபொழுதும் அதற்கு ஈடுஆகாது. இறைவா, உன்னுடைய அகண்ட சச்சிதானந்த சொருபத்தில் என்னுடைய ஜீவபோதத்தை ஒதுக்கித் தள்ளி விட்டு உன்னுடைய சொருபம் என்கின்ற நிலைபேறுடைய வாழ்விலே நான் நிலைத்திருப்பேனாக என்பது இக்கண்ணியின் கருத்து.

371. மண்ணாதி பூதமெல்லாம்
வைத்திருந்த நின்னிறைவைக்
கண்ணாரக் கண்டு
களித்தேன் பராபரமே.

பிரபஞ்சத்தின் தோற்றம், இருப்பு, ஒடுக்கம் ஆகியவைகள் சிவசொருபம் என்னும் பூரணப் பெருவெளியில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. இந்த விளையாட்டில் ஜீவனுடைய

தோற்றமும், இடம் பெறுகிறது. ஜீவநிலையைக் கலைத்து விடாது வைத்துக் கொண்டு இறைவனுடைய கிருத்தியங்கள் என்னும் விளையாட்டைக் காண்பதில் ஆத்மசாதகனுக்குப் பேரானந்தம் உண்டாகிறது. நல்ல நடிகன் ஒருவன் நாடகமேடையில் எந்தப் பாத்திரமாக நடித்தாலும் அதில் அவன் மகிழ்வுற்று இருக்கிறான். அங்ஙனம் ஆத்மசாதகன் தன்னை இறைவனுக்குச் சொந்தம் என்னும் உண்மையை அனுபூதியில் அறிந்தான பிறகு தன்னுடைய ஜீவவியக்தி உள்பட நிகழ்கின்ற நிகழ்ச்சிகளெல்லாம் இறைவனுடைய திருவிளையாடல்கள் எனக் கண்டு களித்திருக்கிறான் என்பது இக்கண்ணியின் கருத்து.

372. அறியாமை ஈதென்
றறிவித்த அன்றேதான்
பிறியா அருள்நிலையும்
பெற்றேன் பராபரமே.

தாய் தந்தையரிடமிருந்து கல்வியின் பொருட்டு நெடுநாள் பிரிந்திருந்த மாணுக்கனொருவன் விடுமுறை நாட்களில் பெற்றோரைக் காண ஆவலோடு தன் ஊருக்குத்திரும்பினான். திரும்பி வந்தவன் பெற்றோரைக் காணவில்லை. வீடு பூட்டப்பெற்றிருந்தது. அதை முன்னிட்டு அவன் பெருந்துயரத்துக்கு ஆளானான். அப்பொழுது அவனுக்கு ஒரு செய்தி வந்தது. 'இவ்வூரில் நிகழ்ந்து வருகிற நாடகத்தில் உன் தாயும் தந்தையும் மாறுவேடம் பூண்டு கொண்டிருக்கின்றனர். நாடகம் முடியும் வரையில் காத்திருப்பாயாக' என்னும் செய்தி வந்தது. அவனுடைய அறியாமை இது என்று அவனுக்கு அறிவிக்கப்பட்டது. தாய் தந்தையர் இன்னின்ன வேஷம் போட்டிருக்கின்றனர் என்ற செய்தியும் அவனுக்கு எட்டியது. அந்நிலையில் பெற்றோரை விட்டுப் பிரிந்திருந்தவன் போன்று தென்பட்டவன் உண்மையில் பெற்றோரிடமிருந்து பிரித்து வைக்கப்பட்டவன் அல்லன். அதைக் குறித்து அவன் மகிழ்வடைகிறான். அதே பாங்கில் மறைத்தல் என்னும் இறைவனுடைய கிருத்தியத்துக்கு ஜீவாத்மன் இலக்கு ஆகிறான். அருளல் என்னும் செயலுக்கு அவன் பிறகு இலக்கு ஆகுங்கால் மறைத்தல் நிலையை எண்ணி மகிழ்வுறுகிறான். ஜீவர்களாகிய நாம் அனைவரும் இறைவனுடைய சந்நிதியிலேயே இருக்கிறோம். ஆயினும் இறைவனுக்கும் நமக்கும் வெகுதூரம் என்று எண்ணி ஏங்கியிருக்கிறோம். அருள் நிலைக்கு நாம் பாத்திரமாகிற பொழுது இறைவனை விட்டு நாம் ஒருநாளும் பிரிந்திருந்ததில்லை என்று உணர்ந்து மகிழ்வுறுகிறோம். இம்மேலாம் கருத்து இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

373. தீதெனவும் நன்றெனவுந்
தேர்ந்துநான் தேர்ந்தபடி
ஏதும் நடக்கவொட்டா
தென்னே பராபரமே.

இயற்கை முழுதும் கர்ம சொரூபம். அக்கர்மத்தில் தீங்கு விளைவிக்கும் பகுதியும் நலன் விளைவிக்கும் பகுதியும் சேர்ந்தே இருக்கின்றன. எக்கர்மத்தையாவது முற்றிலும் நலன் என்றோ, முற்றிலும் கேடு என்றோ பாகுபடுத்த முடியாது. ஒவ்வொரு கர்மத்திலும் நலன் விளைவிக்கின்ற பகுதியும், கேடு விளைவிக்கின்ற பகுதியும் சேர்ந்தே இருக்கின்றன. ஆதலால் கர்மத்தில் ஈடுபடுகிற ஆத்மசாதகன் ஒருவன் தீங்கையும் நலனையும் சீர்தூக்கிப் பார்த்து எந்தச் சூழ்நிலையில் எந்தக் கர்மத்தின் விளைவாக நலன் அதிகமாகவும் தீங்கு குறைந்ததாகவும் இருக்கிறதோ அந்தக் கர்மத்தை அவன் மேற்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறான். கர்மம் புரிவதை யாருமே தவிர்க்க முடியாது. ஆதலால் கேடு குறைந்தும் நலன் ஓங்கியும் இருக்கிற கர்மத்தை உறுதியாகக் கடைப்பிடித்தல் வேண்டும். துறவறம் பூணுதலைச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். ஒருவன் துறவியாகச் சமுதாயத்தினின்று விலகிக்கொள்ளுகிறபொழுது சமுதாய அமைப்புக்கு அது குறைநிலையாகிறது. ஆயினும் துறவி ஒழுகுகிற பாரமார்த்திகப் பெருவாழ்வு பலபேர்க்கு முன்மாதிரியாயிருந்து அவர்களை நல்வழியில் தூண்டுகிறது. ஆக, துறவறம் பூணுதலில் கேடு குறைந்தும், நலன் அதிகரித்தும் இருக்கின்றன. இதை அறிந்திருந்தும்விவேகி ஒருவன் தீவிரமாகத் துறவறத்தில் ஈடுபடாது இவ்வுலக வாழ்விலேயே உழன்றுகொண்டிருப்பானாகில் அது பரிதாபகரமான நிலையாகிறது. இம்மேலான கோட்பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

உபாசனையில் இஷ்ட நிஷ்டை முக்கிய இடம் பெறுகிறது. இஷ்ட தெய்வ வழிபாட்டில் ஆழ்ந்து ஈடுபடுதல் வேண்டும். அடிக்கடி வழிபாட்டை மாற்றி அமைத்துக்கொண்டே இருக்கக்கூடாது. ஆரம்ப சாதகர்கள் ஒரு தெய்வ வழிபாட்டில் ஆழ்ந்து செல்லுதல் வேண்டும். சிறு செடியைச் சுற்றிலும் வேலி கட்டி அதைப் பாதுகாப்பது அவசியமாகிறது. அது மரமாகும் வரையிலும் அத்தகைய பாதுகாப்பு அதற்கு அவசியமாகிறது. ஆத்மீகச் செடியும் பாதுகாக்கப்படவேண்டும். அடிக்கடி வழிபாட்டு முறையை மாற்றி அமைத்துக் கொண்டே இருந்தால் ஆத்மீகச் செடி அழிந்து போகும். சமய சாதனையிலுள்ள ஆரம்ப சாதகர்களுக்கு இஷ்ட தெய்வ வழிபாடு அத்யாவசியமானது. இஷ்ட தெய்வ தியானத்தின் பொழுது இஷ்ட தெய்வ மந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

ஜபம் பண்ணும்பொழுது தெய்வச் சிந்தனையும்சேர்ந்தே அமைந்திருக்கவேண்டும். தெய்வச் சிந்தனை கலவாத ஜபம் உயிரற்றதாகப் போய் விடும். ஜபம் பண்ணுவதில் சலிப்பும் ஏற்பட்டு விடும். தெய்விக உணர்வோடு தெய்வச் சிந்தனையும் கலந்த ஜபத்துக்கு நல்ல பலன் கிட்டும். அத்தகைய ஜபம் மனதுக்கு இனிமையையும் மகிழ்ச்சியையும் தரும். அத்தகைய ஜபம் மனதில் தெய்விக உணர்வை ஊட்டித் தெய்வத்தை உணரும்படி செய்யும். ஜபத்தின் மூலம் மனதில் மகிழ்ச்சியையும், இனிமையையும் உண்டாக்கலாம். அப்பொழுது சாதகன் தெய்விக அனுபவம் பெறவேண்டுமென்ற ஆவல் உடையவனாக ஜபம் செய்வதில் தன்னை முழுதும் அர்ப்பணிக்க முயல்வான்.

குருவிடமிருந்து மந்திர தீக்ஷை வாங்கியவர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் தாங்கள் குருவிடமிருந்து பெற்ற மந்திரத்தை ஜபம் செய்துகொண்டே இருக்கவேண்டும். குருவிடமிருந்து மந்திர தீக்ஷை பெறாதவர்கள் ஜபம் செய்யக்கூடாதா என்னும் கேள்வி எழலாம். குருவிடமிருந்து மந்திர தீக்ஷை பெற்ற பிறகு தான் ஜபம் செய்ய வேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. மந்திர தீக்ஷை பெறாதவர்கள் ஓம் என்ற மந்திரத்தையோ, தங்கள் இஷ்ட தெய்வங்களின் மந்திரங்களையோ ஜபம் செய்து வரலாம்.

சாதனையின் ஆரம்பத்தில் கட்டுத்திட்டங்கள் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். நமக்கு நாமே சில கட்டுத்திட்டங்களை ஏற்படுத்திக் கொண்டு அவற்றை அனுசரித்து ஒழுகினால் தான் சாதனையில் முன்னேற்றம் காண முடியும். கட்டுத் திட்டங்களை அமைத்துக்கொண்டு அவற்றின்படி ஒழுகவில்லை என்றால் மனம் சாதனையில் முறையாக ஈடுபடாது. பொதுவாக மனம் கட்டுத்திட்டத்திலிருந்து விலகிப் போகவே முயலும். அதற்குச் சோம்பல் முதல் காரணமாகும். சோம்பலை அகற்றவும், மனதைச் சாதனையில் உறுதிப்படுத்தவும் சாதகன் கட்டுத்திட்டங்களைத் தீவிரமாகக் கடைப்பிடிக்க வேண்டும். ஜபம் அதிகரித்து வரவேண்டுமென்றால் ஒருநாளைக்கு இத்தனை முறை இறைவனுடைய நாமத்தை ஜபிப்பதாக நீ விரதம் எடுத்துக்கொள்ளவேண்டும். பிறகு அவ்விரதத்திலிருந்து நீ வழுவாதிருக்கவேண்டும். ஜபத்தின் எண்ணிக்கையை நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு போவதும், பிறகு நாளுக்கு நாள் சிறிது குறைத்துக் கொண்டு வருவதும் ஆகிய முறையொன்று உண்டு. வேண்டுமென்றால் அம்முறையை நீ பின்பற்றலாம். அமாவாசைக்கு அடுத்த நாள் ஆயிரம் தடவை ஜபம் பண்ணுவதாகவும், அமாவாசை முடிந்த இரண்டாம்நாள் இரண்டாயிரம் முறை ஜபம் பண்ணுவதாகவும், மூன்றாம் நாள் மூன்றாயிரம் முறை ஜபம் பண்ணுவதாகவும் இங்ஙனம் நாளுக்கு நாள் ஆயிரம் ஆயிரமாகக் கூட்டிக் கொண்டே போகத் தீர்மானிக்கவேண்டும். அப்படிக் கூட்டிக்கொண்டே போனால் பௌர்ணமியன்று ஜபம் பதினையாயிரம் எண்ணிக்கையை எட்டிவிடும். வளர்பிறையில் சந்திரன் வளர்வதுபோன்று ஜபமும் வளர்கிறது. பௌர்ணமிக்கு அடுத்த நாள் பதினையாயிரம் என்ற ஜப எண்ணிக்கையைப் பதினாலாயிரத்துக்குக் கொண்டுவரவேண்டும். அப்படி

நாளுக்கு நாள் ஓர் ஆயிரம் குறைத்துக் கொண்டே வந்தால் அடுத்த அமாவாசை வரும்பொழுது ஜபம் ஒரு நாளைக்கு ஆயிரம் எண்ணிக்கையாக வந்து நிற்கும். தேய்பிறையில் சந்திரன் தேய்வதுபோன்று ஜபமும் குறைந்துகொண்டே வருகிறது. ஜபம் செய்வதில் இப்படி ஒரு விதி முறையை வைத்துக் கொண்டு உன் இஷ்ட தெய்வத்தின் நாமத்தையோ, உன் குரு உபதேசித்த மந்திரத்தையோ இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு அம்முறையைக் கடைப்பிடித்துவரவேண்டும். ஜபம் செய்து இந்த விதிமுறையை நடைமுறைக்குக் கொண்டுவருவதில் ஒருநாளும் தவறக்கூடாது. ஜபம்செய்வது எக்காரணத்தை முன்னிட்டும் இவ்விதி முறைக்குக் குறையக்கூடாது. சமயசம்பந்தமான விசேஷ நாட்கள் வருகின்றபொழுது இந்த முறையில் நீ ஜபம் பண்ணுவதோடு அந்த விசேஷ தினத்துக்குண்டான ஜபத்தையும் சேர்த்துக்கொள்ளலாம். ஜபம் செய்வதை எண்ணிக்கொண்டிருப்பதில் மனதைச் செலுத்திக் கொண்டிருக்கக்கூடாது. ஜபம் செய்வதைக் கணக்கிடுவதற்கு ஜபமாலையில் உள்ள மணிகள் உதவுகின்றன. ஆயிரம் மணிகள் உள்ள ஜபமாலையை வைத்துக் கொண்டு ஒருமுறை அம்மணிகளை உருட்டினல் ஜபம் ஆயிரத்தை எட்டிவிடும். மனது எண்ணிக்கையில் போகாது ஜபத்தில் ஈடுபட வேண்டும் என்பதற்காகத்தான் ஜபத்தின்பொழுது ஜபமாலை பயன்படுத்தப்படுகிறது. எனவே ஜபத்தைக் கணக்கிடுவதற்கு நீயும் ஜபமாலையைப் பயன்படுத்தலாம். ஜபம் என்னும் சாதனையை இங்ஙனம் நீ வளர்த்து வரலாம்.

ஜபம் செய்துகொண்டே உனக்கு அமைந்த கடமைகளைச் செய்துவரலாம். ஜபம் முதிர்ந்து வருகிறபொழுது கடமைகளைச் செய்வதற்கிடையிலும் ஜபம் நிகழ்ந்துகொண்டிருக்கும். மனம் சூட்சும நிலையில் ஜபம் செய்துகொண்டிருக்கக் காயம் கர்மத்தில் ஈடுபட்டிருக்கலாம். ஜபமும் கர்மமும் ஒன்றித்துவிடுமானல் மனம் விரைவில் பண்படுகிறது.

தன்னலமற்றுப் பணிவிடைசெய். உலக நலனுக்காகவும், ஈசுவர அர்ப்பணமாகவும் கடமையைச் செய்து பழகு. பேர் புகழுக்காகவோ, பயன் கருதியோ கடமையைச் செய்யாது, கடமைக்காகவே கடமையைச் செய்து பழகு. இப்படிக் கர்மம் பண்ணுவதன் மூலம் சித்தசுத்தி உண்டாகிறது.

ஞான விசாரணைசெய்து பழகுவதும் அவசியம். உள்ளத்தில் காமம் எழுகின்றபொழுது தகுந்த ஞான விசாரணையின் மூலம் அக்காம எண்ணத்தை அடித்துத் துறத்து. வடிவழகில் காம இச்சை உண்டாகிறது. உண்மையை ஆராய்ந்து பார்க்குமிடத்து நீ எதை அழகு என்று எண்ணுகிருயோ அது அருவருப்புக்குரியது என்பது விளங்கும். அருவருப்புக்குரிய வடிவத்திலா இத்தகைய காமம் என்பது விவேகத்துக்கு விளங்கும். விவேகத்தைப் பயன்படுத்தி உன்னை நீ உயர்ந்த பண்பாளனாக்கலாம்.

உணர்வைப் பேருணர்வாக மாற்றி அமைப்பது பக்தியோகம் எனப்படும். உனக்குப் பொருந்தாத இயல்புகளாக இருக்கும் காமக் குரோதாதிகளைக் கடவுள்பால் திருப்பினல் உனக்குக் கடவுளிடத்தில் பக்தி அதிகரிக்கிறது. காமக்குரோதாதிகளைக் கடவுள்பால் திருப்பும்பொழுது அவை உனக்குக் கேடு செய்வதற்குப் பதிலாக நன்மை செய்கின்றன. பக்தியை வளர்ப்பதற்கு ஜபமும் துணைபுரிகிறது. பகவத் விஷயங்களைச் சிரத்தையோடு கேட்பதும், சிரத்தையோடு படிப்பதும் உன் உள்ளத்தில் இறைவனிடத்துப் பக்தியை வளர்க்கின்றன. பகவத் பெருமைகளைப் பேசுவதில் நீ இன்பம் அடையலாம்.

பக்தர்களுடைய சகவாசம் உனக்குப் பெருநன்மையை விளைவிக்கும். பகவான், பாகவதம், பக்தன் ஆகிய மூன்றும் ஒன்று என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். பக்தர்களோடு இருந்து அவர்களுக்குத் தொண்டு புரிவதும் நல்ல சாதனை ஆகும்.

மேற்கூறிய கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்னும் முறைகளுள் ஏதாவது ஒரு முறையையோ, ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளையோ, எல்லா முறைகளையுமோ அனுசரித்து உன்னை நீ சிறந்த சாதகனக ஆக்கிக் கொள்வாயாக. சாதனையில் ஆழ்ந்துபோகுமளவு நீ உன்னைத்தெய்வீக புருஷனக ஆக்கிக்கொள்ளலாம்.

# சமய அனுஷ்டானம்

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள ஆல்மேடாவில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[412ஆம் பக்கத் தொடர்ச்சி]

நீங்கள் தெய்வக்காட்சி பெற்ருகவேண்டும். தெய்வக்காட்சி பெறுவதுதான் சமய அனுஷ்டானமாகும். நீங்கள் சமய அனுஷ்டானம் என்று சொல்லுவது கிறிஸ்துநாதர் புகட்டியது அன்று. எளிமையுடையவர்களே பாக்கியவான்கள். அவர்களிடத்தில்தாம் கடவுள் சாம்ராஜ்யம் இருக்கிறது. இயேசுவின் இப்போதனை வேடிக்கைக்குரியதா? உண்மையான சமயம் எது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? நீங்கள் செயல்முறை சமயம் எது என்று எண்ணுகிறீர்களோ அதிலிருந்து கடவுள் எங்களைக் காப்பாற்றட்டும். தூய உள்ளம் படைத்தவர்கள் பாக்கியவான்கள். அவர்கள் கடவுளைக் காணமுடியும். உள்ளத்தூய்மை என்பது தெருக்கூட்டுவதிலும், ஆஸ்பத்திரி கட்டுவதிலுமா அமைந்திருக்கிறது! தூய மனப்பான்மையோடு செய்கின்ற செயல்கள் நற்செயல்கள் ஆகின்றன. விளம்பர நோக்கத்தோடு தானம் பண்ணுகிறவர்கள் இருக்கிருர்கள். சிறு தொகையைத் தானமாகக் கொடுத்துவிட்டுச் செய்தித்தாள்களில் விளம்பரத்தை எதிர்பார்ப்பவர்களுமிருக்கிருர்கள். யாரும் உங்களுக்கு உதவ முடியாதென்று உங்களுக்குத் தெரியாதா? ஏழைகளுக்கும், துன்புறுபவர்களுக்கும், வலிமையற்றவர்களுக்கும் செய்கின்ற பணிவிடையைத் தெய்வப் பணிவிடையாகக் கருதிச் செய்து வருவீர்களாக. கடமையை இங்ஙனம் செய்தாக வேண்டும். கர்மபலனில் கருத்து வைக்கவேண்டியதில்லை. பயன் கருதாது செய்யும் செயல் ஆன்மீக வளர்ச்சிக்கு உதவுகிறது. பயன் கருதாது பணியாற்றுகின்றவர்களே பரமனுடைய உலகுக்குச் செல்லுகிருர்கள்.

நம் உள்ளம் பெரும் கோயிலாகவும், ஊன் உடம்பு ஆலயமாகவும் இருக்கின்றன. இறைவன் நம்மிடத்தில் குடிகொண்டிருக்கிருர். அவரே நமக்குத் தலைவராகின்ருர். நம்மிடத்திலிருக்கும் கடவுளை நாம் காணவேண்டும். கடவுள் காட்சி பெறுவதே சமய அனுஷ்டானமாகும்; கடவுள் காட்சி பெறுவதுதான்சுதந்திரம்; கடவுள் காட்சி பெறுவதுதான் உண்மையான வழிபாடு. ஆத்மானுபூதி பெறுங்கள். அது தான் நீங்கள் செய்யவேண்டிய கடமையாகும். நீங்கள் அகண்டாகார ஆத்ம சொரூபம் என்பதை அறிந்துகொள்ளுங்கள். அப்படி அறிந்து கொள்வதே சமய அனுஷ்டானமாகும். மற்றதெல்லாம் சமய அனுஷ்டானம் ஆகாது. மற்றவை யாவும் மறைந்து போகக்கூடியவை. ஆத்ம சொரூபம் அழியாதது. நீங்கள் கட்டிய மருத்துவமனைகள் இடிந்து போகும். சாலை அமைத்து வைத்தவர்கள் எல்லாரும் மறைந்து போவார்கள். பூமி துண்டு துண்டாகச் சிதறிப் போய்விடும். சூரிய மண்டலங்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போகும். ஆத்மா ஒன்றே அழியாது நிலைத்து நிற்கும்.

இன்றிருந்து நாளைக்கு மறைந்து போகும் உலகப் பொருள்களை நாடிப்போவது மேலானதா? அழியாத ஆத்ம சொரூபத்தை வழிபடுவது மேலானதா? உலகப் பொருள்களைப் பெறுவதற்கு நம் சக்தியை எல்லாம் செலவிட்டு அவற்றை அடைவதற்கு முன்பு மரணம் அடைந்து விடுகின்ருேம்.

முடிசார்ந்த மன்னரும் முடிவில் பிடிசாம்பல் ஆகின்ருர்கள். பலநாடுகளை வென்ற மன்னன் மரணம் வந்தபொழுது "விலையுயர்ந்த பொருள்கள் இருக்கும் பேழைகளை எல்லாம் திறந்து வையுங்கள். பெரிய வைரக்கல்லை எடுத்து என்னிடம் தாருங்கள்" என்று கூறி அவ்வைரக்கல்லைத் தன் மார்பின் மீது வைத்து அழுதான். அப்படி அழுது கொண்டிருக்கும் பொழுதே அவன் இறந்து விட்டான். "நான் வாழ்கிறேன்" என்று மனிதன் சொல்லுகிருன். மரணத்தைக் குறித்தபயமே வாழ்வைப் பற்றிக் கொண்டிருக்கச் செய்கிறது என்பதை அவன் அறியாதவனுக இருக்கிருன். ஆனல் சுகத்தை அனுபவிக்கிறேன் என்று மனிதன் சொல்லுகிருன். இயற்கை தன்னை அடிமைப்படுத்தி வைத்திருப்பதை அவன் அறிவதில்லை. இயற்கை நம் அனைவரையும் நசுக்கிக் கொண்டிருக்கிறது. உங்களுக்குக் கிடைக்கும் சிறு

இன்பத்தைக் கணக்கிட்டுப் பாருங்கள். உங்கள் மூலம் இயற்கைத்தாய் தன்காரியத்தைச் செய்து வருகின்றாள். நீங்கள் இறந்து போனால் உங்கள் சரீரம் தாவரம் வளர்வதற்கு உணவு ஆகிறது. இத்தகைய நிலையில் இருக்கும் நீங்கள் இன்பத்தை அனுபவித்திருப்பதாக எண்ணிக்கொண்டிருக்கிறீர்கள். இங்ஙனம் இயற்கைச் சக்கரம் சுழன்று கொண்டிருக்கிறது.

ஆத்மாவை ஆத்மாவாக அறிவதுதான் சமய அனுஷ்டானமாகும். இவ்வுயர்ந்த லட்சியத்திற்கு எடுத்துச் செல்லும் ஒவ்வொன்றும் நலமுடையதாகிறது. இவ்வுயர்ந்த லட்சியம் தியாகத்தின் மூலமாகவே அடையப்படுகிறது. தியானத்தின் மூலமாகவும் அந்த லட்சியம் அடையப்படுகிறது. புலனின்பங்களைத் துறந்து நம்மை உடலோடு கட்டுகின்ற கட்டுகளை எல்லாம் உதறித்தள்ளுதல் தியாகம் ஆகிறது. "எனக்கு இவ்வுலக வாழ்வு வேண்டாம்; புலனின்ப வாழ்வு வேண்டாம்; இவற்றிற்கு அப்பாலுள்ள பெருவாழ்வுதான் வேண்டும்." இங்ஙனம் எண்ணுவது தியாகம். தியானத்தின் வலிமையினால் முன்பு செய்த கேட்டின் விளைவை அகற்றவேண்டும்.

இயற்கைக்கு அடிமைப்பட்டவர்களாக நாம் இருக்கின்றோம். புறவுலகிலிருந்து ஓசை வருமாயின் அவ்வோசையைக் காது கொடுத்துக் கேட்கின்றோம். இயற்கையில் நிகழ்கின்ற நிகழ்ச்சியைக் கண்கொண்டு காண்கின்றோம். குரங்குகள் போன்று இருக்கின்றோம். இரண்டாயிரம் குரங்குகள் ஒன்று சேர்ந்து வாழ்வதைப் போல் நம்முடைய வாழ்வு வெறி பிடித்த வாழ்வாக இருக்கிறது. குரங்குகள் அமைதியாக இருக்கமாட்டா. அங்ஙனமே நாமும் அமைதியாக இருக்க முடிவதில்லை. நாம் இன்புற்றிருக்கிறோம் என்று அழகாகச் சொல்லிக் கொள்வது விந்தையாக இருக்கிறது. உலக சுகத்தை நாடாமல் இருக்கமுடிவதில்லை. உலக சுகத்தை நாடும்படி இயற்கை நம்மை இழுக்கிறது. அழகான ஓசைவரும் பொழுது நாம் அதைக் கேட்கின்றோம். அவ்வோசையை நாம் கேட்கலாம்; அல்லது கேட்காமலிருக்கலாம். ஆனால்என் இயல்பு துன்பப் படுகுழியில் என்னைத் தள்ளுகிறது. விரைவில் நான் துன்பத்துக்கு ஆளாகின்றேன். நம்முடைய இந்திரிய சுகங்களைப்பற்றியும் நம் உடைமைகளைப் பற்றியும் பெருமிதமாகப் பேசுகின்றோம். ஒரு மனிதன் என்னை மிகப் படித்தவன் என்று பாராட்டுகின்றான். மற்றொரு மனிதன் என்னை அறிவிலி என்று எண்ணுகின்றான். இத்தகைய அடிமைக்கும் இழிவுக்கும் அறியாமை நம்மை உட்படுத்துகிறது.

தியானம் என்பது என்ன? நமக்கு ஆற்றலைத் தருவதே தியானமாகும். அழகான பொருள் இருக்கிறது. இதைப் பார் என்று இயற்கை என்கண்களை இழுக்கிறது. நான் அதைப்பார்க்காமல் இருக்கவேண்டும். 'என்ன அருமையான வாசனை! இதை மோந்து பார்' என்று இயற்கை என்னைத் தூண்டுகிறது. அதை மோந்து பார்க்காதே என்று நான் என் மூக்குக்கு உத்தரவு இடுகின்றேன். மூக்கு அதை மோந்து பார்ப்பதில்லை. அதைப் பார்க்காதே என்று கண்களுக்கு உத்தரவிட்டால் கண்கள் அதைப் பார்ப்பதில்லை. பயங்கரமான செயல் ஒன்றை என் வாழ்க்கையில் இயற்கை செய்கிறது. என்னுடைய குழந்தைகளில் ஒன்றைக் கொன்றுவிட்டு, 'முட்டாளே, துன்பக் கடலில் மூழ்கி அழு' என்று இயற்கை என்னை ஏவுகிறது. நான் ஏன் அழவேண்டும்? என்று அதற்குச் சொல்லவேண்டும். நிமிர்ந்து நின்று சுதந்திரமாக நாம் இருக்கவேண்டும். தியானத்தின் மூலமாகத்தான் இத்தகைய சக்தியை நாம் பெறமுடியும். தியானத்தின் மூலமே என் இயல்பை மாற்றி அமைக்க முடியும்.

தியானத்தைப் பெறுவதற்குப் பலவழிகள் இருக்கின்றன. அவரவர் இயல்புக்கேற்ற மார்க்கமுண்டு. மனதை வசத்துக்குக்கொண்டு வரவேண்டும் என்பது பொதுவிதி. மனதை ஓர் ஏரியோடு ஒப்பிடலாம். ஏரியில் போடப்படும் ஒவ்வொரு கல்லும் அலையை உண்டாக்குகிறது. அவ் அலைகள் நம் மனதில் உண்டாகும் எண்ணங்களாகின்றன. அவ்வெண்ண அலைகள் நம் நிஜசொரூபத்தை மறைக்கின்றன. ஏரியின் நீரில் சந்திரன் பிம்பிக்கிறது. ஆனால் சந்திரபிம்பத்தைப் பார்க்க முடியாதபடி நீர்ப்பரப்பின் மேல்பகுதியில் அலை வீசிக்கொண்டிருக்கிறது. நீர்ப்பரப்பில் அமைதி உண்டாக வேண்டும். அப்பொழுது

தான் சந்திரபிம்பம் தெரியும். நீர்ப்பரப்பில் அலை உண்டாகாமல் இருக்கட்டும். அங்ஙனம் நம் மனது அமைதி அடையவேண்டும். மனம் அமைதி அடைந்தானதும் ஆத்மசொரூபம் நமக்கு விளங்கிவிடும். ஆத்மா யாண்டும் ஆனந்த மயமாக விருக்கிறது. ஆனல் மனம் இந்திரியங்களால் இழுக்கப்பட்டுப் பரபரப்பு டையதாக விருக்கிறது. மனம் பரபரப்பு டையதாக இருக்கும்பொழுது பொறிகளைக் கட்டுப்படுத்த முடியாது. தியானத்தில் அமரும்பொழுது மனம் கடவுளைப்பற்றி நினைப்பது போல இருந்துகொண்டு ஒரு நிமிஷத்தில் உலகிலுள்ள ஏதோ ஓர் இடத்துக்கு ஓடி விடும். அந்த இடத்திலிருந்து மனதை இழுத்தால் வேறொரு இடத்துக்கு அது ஓடிவிடும். தியானத்தின்பொழுது பழைய வாசனைகள் எல்லாம் ஞாபகத்துக்கு வருகின்றன. இத்தகைய மனோவிருத்திகளை எல்லாம் அழித்தாக வேண்டும். அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும் மனதைக் கடவுளிடம் திருப்பவேண்டும். கடவுளைப்பற்றிய தியானம் வலுத்து வரவர மனம் உறுதி படைத்ததாகிறது.

அப்பியாசம் இடைவிடாது நிகழ்ந்து வர வேண்டும். மனம் மெதுவாகத்தான் வசத்துக்கு வரும். ஒரு நாளில் மனதை வசப்படுத்தி விடமுடியாது. மனதை வசப்படுத்த பல வருஷங்களாகலாம்; பல பிறவிகளும் ஆகலாம். மனதோடு போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருக்கவேண்டும். மனம் தெய்வத்தின்பால் போய்க்கொண்டிருக்கவேண்டும். சிறிது சிறிதாகத்தான் நாம் வெற்றி காணமுடியும். இறுதியில் ஆத்மீக உணர்ச்சியைப் பெறமுடியும். ஆத்மீகச் செல்வத்தை நம்மிடமிருந்து யாரும் எடுத்துவிட முடியாது. யாராலும் அழிக்க முடியாத எந்தத் துயரத்தாலும் பாதிக்கப்படாத செல்வம் ஆத்மீகச் செல்வமாகும்.

இத்தனை ஆண்டுகளாக நாம் மற்றவர்களைச் சார்ந்து வாழ்ந்தோம். ஒருவரிடமிருந்து நமக்குக் கிட்டிய இன்பம் அவர் மறைந்ததும் அவ்வின்பமும் மறைகிறது. மனிதனுடைய அறியாமையைப் பாருங்கள். தன் இன்பத்திற்கு அவன் மற்றவர்களைச் சார்ந்திருக்கின்றான். பிரிவு என்பது துன்பத்தைத் தருகிறது. இது இயல்புதான். சுகத்துக்காகப் பொருளை நம்பி இருக்கின்றோம். பொருள் மாறி அமைந்து கொண்டுதானிருக்கும். மாறி அமையக்கூடிய ஒன்று சுகம் தரும் என்று எண்ணி இருக்கின்றோம். ஆனல் அது ஒரு வேளை சுகத்தையும் மற்றொரு வேளை துன்பத்தையும்தான் தந்து கொண்டிருக்கிறது. மாறி அமையாத ஆத்மாவைச் சார்ந்திருக்கிறோமா என்றால் அது தான் இல்லை.

எல்லையற்ற ஆத்மா ஒன்றே மாறாதது. மற்றவையாவும் மாறி அமையக்கூடியவை. இயங்குவதால்தான் இதற்கு இயற்கை என்னும் பெயர் வந்துள்ளது. உங்கள் அகத்திலிருக்கும் ஆத்ம சொரூபத்தைத் தவிர வேறெங்கும் நீங்கள் நிலைபேற்றைக் காணமுடியாது. மாறாத ஆத்மாவிடத்து எல்லையற்ற ஆனந்தம் இருக்கிறது. அவ்வானந்தத்தைப் பெறுவதற்குத் தியானத்தின்மூலம் அதற்குரிய வாயிலைத் திறக்கவேண்டும். பிரார்த்தனைகளும், பூஜா கிரியைகளும் தியானத்துக்குரிய ஆரம்ப நிலைகளாகும். கடவுளிடம் பிரார்த்திக்கின்றோம். விருப்பமான பொருளைக் கடவுளுக்குச் சமர்ப்பிக்கின்றோம். அக்கிரியைகளெல்லாம் நம்மிடமுள்ள ஆத்ம சக்தியை எழுப்புகின்றன. மந்திரங்களை ஜபிப்பதும், மலர்களைத் தூவுவதும், விக்கிரகங்களை வழிபடுவதும், ஆலயங்களுக்குச் செல்வதும், தீபாராதனை போன்ற பூஜா கிரியைகளைச் செய்வதும் மனதைத் தியான நிலைக்குப் பக்குவப்படுத்துகின்றன. அப்பக்குவமானநிலை மனதில்தான் இருக்கிறது. மனதை முறையாகக் கையாண்டால் மனம் பக்குவமடைகின்றது. பக்குவமடைந்த மனதில் தியானம் நன்கு கைகூடுகிறது. மக்கள் அறிந்தோ அறியாமலோ மனதைப் பக்குவப்படுத்துவதற்குத்தான் கிரியைகளைச் செய்கிறார்கள். ஜீவாத்மன் உள்ளத்தைக் கிளறுவதன் மூலம் அறிவைப் பெறுகின்றான். வெளியுலகில் இருந்து எந்த அறிவும் வரவில்லை. தியான சக்தியைக்கொண்டு சரீரத்திலிருந்து நம்மைப் பிரித்துவிடலாம். அப்பொழுது அழியாதவர்கள் என்பதை நாம் அறிகிறோம். பிறப்போ, இறப்போ நமக்கு இல்லை. பூரணர்களாகவும், சுதந்திரர்களாகவும் இருக்கிறோம் என்பதை நாம் அறிகின்றோம். இதுவேமுடிந்த நிலையாகும். (முற்றும்)

# நம் தேசீய செல்வம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் திருப்பராய்த்துறை தபோவனம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[417ஆம் பக்கத் தொடர்ச்சி]

வாக்குமயமான தவத்தை ஆராய்வோம். சொல்லின் மூலமாகவும் நாம் பிறரைத் துன் புறுத்தலாம். நாம் பிறரைத் துன்புறுத்தும் சொற்களைச் சொல்லக் கூடாது. நம் சொல் இனிய பாங்கில்தான் அமையவேண்டும். கோல்கொண்டு சரீரத்தை அடிப்பதைவிடச் சொல்கொண்டு பிறரைத் துன்புறுத்துவது கொடியது. எழுத்து மூலமாக ஒருநாட்டுக் கும் மற்றொரு நாட்டுக்குமிடையில் போரைக் கிளப்பிவிடுபவர்களும் இருக்கிறார்கள். தகாத சொற்களைக் கூறிக் குழப்பங்களை உண்டுபண் ணுபவர்களிருக்கிறார்கள். நலம் தருகிற சொல் லைப் பேசிப் பழகவேண்டும். வாக்கு சத்திய வாக்காக இருக்கவேண்டும்.

நம் வைதீகப் பண்பாடு ஸத்தியம், தர்மம் என்னும் இரண்டு சொற்களில் அமைந்திருக் கிறது. ஸத்யம் வத, தர்மம் சர—சத்தியத் தையே பேசு; தர்மத்தையே கடைப்பிடி. எல்லா நலன்களும் இவ்விரண்டு கோட்பாடுகளில் அடங்கிவிடுகின்றன என்ற உண்மை நன்கு ஆராய்ச்சி பண்ணினால் தெரியும். திரிகரணங் களும் ஒத்திருக்கும்பொழுது அது சத்திய மாகிறது. 'பிரம்மம் சத்யம் ஜகத் மித்யா' என் பது சத்தியத்தின் மேல்நிலையாகிறது. பிரம்மம் தான் சத்தியப் பொருள். இவ்வுலகம் வெறும் தோற்றமாக இருக்கின்றது. ஆத்மசாதகன் தெய்வக்காட்சிக்கு ஏதுவான சொற்களைப் பேசவேண்டும். லௌகீகச் சொற்களைப் புறக்கணிக்கவேண்டும். எது என்றைக்கும் அழிந்துபோகாமல் இருக்கிறதோ அது சத்தி யம். எது இன்றைக்கு இருந்து நாளைக்கு இல்லாமல் போகின்றதோ அது பொய். நம் சரீரம் சத்தியமானதன்று. ஆத்மசொரூபம் சத்தியமானது. முன்பு ஒரு காலத்தில் நம் சரீரம் இல்லை. இப்பொழுது நம் சரீரம் இருக் கிறது. பின்பு ஒருகாலத்தில் சரீரம் இருக் காது. சரீரத்தை உபசாரத்துக்காக மெய் என்று சொல்லுகின்றோம். ஆனால் அது உண்மையில் மெய் இல்லை. சரீரம் நிலைத்தி ருக்கும் என்ற எண்ணத்தோடு உடல் வாழ்க்கையை உறுதிப்படுத்த முயல்கின்றவன் சத்தியத்தினின்று பிசகியவனாகின்றான். ஆத்ம சொருபத்தில் நிலைத்து நிற்கின்ற பாங்கில் வாழ்கின்றவன் சத்தியத்தில் நிலைத்தவனாகின் றான்.

சத்தியத்தின் மேலாம் பகுதி பரவஸ்து ஒன்றைத்தான் அங்கீகரிப்பதாகும். பிரபஞ்சத் தோற்றம் முழுவதையும் நிராகரிப்பவன் சத்தி யத்தில் நிலைபெற்றவனாகின்றான். சத்தியம், ஞானம், அனந்தம், பிரம்மம் என்பன மெய்ப் பொருளுக்குரிய விளக்கங்களாகும். காலத்தால் அடிபடாததும், இடத்தால் கட்டுப்படாததும், எந்தச் செயலிலும் அடங்காததுமாக இருப்பது பேரறிவு சொரூபம் ஆகிறது. மெய்ப்பொருள் அகண்டாகாரமாக இருக்கிறது. அவ்வுண் மையை நிலைநாட்ட வருகின்ற சொல் சத்தியம். இன்றைக்கிருந்து நாளைக்கு அழியக்கூடிய சொல் சத்தியத்திலிருந்து பிசகியதாகிறது. சத்தியத்தின் மேலாம்பகுதியில் தெய்வத்தைப் போற்றுதல், வணங்குதல், சார்ந்திருத்தல் முத லிய செயல்கள் நிகழ்கின்றன. பிரபஞ்சத் தைச் சார்ந்திருப்பது அசத்தியமாகிறது. சத் தியத்தை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரு வது மிகவும் கடினமாகிறது. ஆகையால் சத்திய விரதத்துக்கு நிகரான தவம் இல்லை யென்றே சொல்லலாம். சத்தியத்தை உறுதி யாகக் கடைப்பிடிப்பவன் சத்தியப் பொருளா கிய பரம்பொருளை அடைவது திண்ணம். மேலும் பிறருக்கு நலம் தரக்கூடியதாகவும், பிரியமானதாகவும் நம்முடைய சொற்கள் இருக்கவேண்டும்.

குழந்தை ஒன்று பள்ளி செல்ல மறுக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அக்குழந்தை யைப் பார்த்து 'நீ பள்ளி போக வேண்டாம்' என்று சொன்னால் அச்சொல் அதற்குப் பிரீதி கரமாக இருக்கும். ஆனால் அது அக்குழந் தைக்கு நலம் தரும் சொல் அன்று. பள்ளிக்குச் செல்வதுதான் நல்லது. பள்ளி செல்லாது வீண்பொழுது போக்கக்கூடாது என்று இனி மையாகக் கூறி அதன் மனதை மாற்றி அமைப்

பதற்குரிய சொல்லைச் சொல்லவேண்டும். சில சொற்களும், செயல்களும் விஷயம் தெரியாதவர்களுக்குப் பிரீதிகரமாக இருக்கும். ஆனல் அவற்றில் கேடுதான் வந்து முடியும். நோயாளி மருந்தைச் சாப்பிடமாட்டேன் என்று சொல்லுகின்ருன். இஷ்டமில்லாவிட்டால் சாப்பிட வேண்டாம் என்று அவனிடம் சொன்னல் அது அவனுக்குப் பிரீதிகரமாக இருக்கும். ஆனல் அது அவனுக்கு நலம் செய்யாது. நலம் தரும் சொல்லையும், மகிழ்ச்சியூட்டும் சொல்லையும் சொல்ல வேண்டும். இப்படிச் சொல்லைக் கையாண்டால் அந்தச் சொல் மனதை நல்ல வழியில் திருத்தி அமைக்கின்றது. இப்படிச் சொல்லைக் கையாள்வது வாக்கு மயமான தவமாகிறது.

அடுத்தது சுவாத்யாயம் என்னும் பகுதி வருகிறது. சான்ருேர்கள் எழுதி வைத்துள்ள பாரமார்த்திக நூல்களைப் பக்தி விசுவாசத்தோடு ஓதுவதும்,அந்நூல்களை ஓதக்கேட்பதும் சுவாத்யாயமாகின்றது. நாள்தோறும் அந்நூல்களை ஓதுவதன் மூலமாக நா சுத்தி அடைகின்றது. அந்நூல்களில் உள்ள கருத்துக்களை எண்ணிப் பார்ப்பதன் மூலமாக மனம் பரிபாகமடைகின்றது. சுவாத்யாயம் நம்முடைய நாவைச் சுத்தப்படுத்துகிறது.

கடவுள் வணக்கத்துக்குரிய அருட்பாடல்களை அனுபூதிமான்கள் பாடியிருக்கின்ருர்கள். அவர்கள் பாடிய பாடல்கள் எம்மொழியில் வேண்டுமானலும் அமைந்திருக்கலாம். பக்தி விசுவாசத்தோடு நாள்தோறும் அப்பாடல்களை ஓதி வந்தால் வாக்கு சுத்தம் அடைகின்றது. நாம் திருந்தியமைகின்ருேம்.

சத்தியத்தைப் பிரியமாக, இதமாகஇருக்கும்படி பேசவேண்டும். அருட்பாடல்களைப் பாடுதல் வேண்டும். இந்தப் போக்கில் நாவைப் பயன்படுத்தினல் அது வாக்கு மயமான தவம் ஆகிறது. நா சுத்தி அடைவதோடு மனதும் பரிபாகம் அடைகின்றது.

மனம் இனிமை நிறைந்த, சாந்தம் நிறைந்த தெய்விக உணர்ச்சியிலேயே யாண்டும் ஊறியிருக்கவேண்டும். கடவுளுக்குப் படைத்த உணவைப் பிரசாதமாகஏற்றுக்கொள்ளவேண்டும். விபூதி, குங்குமம், திருமண், உணவுப் பொருள் ஆகியவற்றை ஆலயத்திலிருந்து பிரசாதமாக நமக்குத் தருகின்ருர்கள். கோயில் பிரசாதம் என்று சொன்னவுடன் இறைவன் அருள்பிரசாதமாக வருகிறது என்ற எண்ணத்தோடு அதை ஏற்றுக்கொள்கின்ருேம். மனதை யாண்டும் நல்ல நிலையில் வைத்திருக்கவேண்டும். மனம் மிகைபட்ட களிபேறு கொண்டிருக்கக்கூடாது; துயரப்பட்டுக் கொண்டும் இருக்கக்கூடாது. மனம் அல்ப எண்ணத்திற்கு இடம் தரக்கூடாது. தெய்விக எண்ணத்தில் இனிமையும் சாந்தமும் கம்பீரமும் உடையதாக இருக்கவேண்டும். மனதைச் சதா அந்நிலையில் வைத்திருப்பது மனேமயமான தவம் ஆகிறது.

பிறரோடு இணக்கம் கொள்கின்றபொழுது அவருக்கு நலத்தை உண்டுபண்ணுகின்ற பாங்கில் உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக வைத்துக்கொள்ளுதல் சௌசம் ஆகிறது.

வாய் பேசாதிருந்து பழகுதல் மௌன மாகும். "குறிப்பிட்ட சில நாட்களில் சில மணி நேரமாவது யாரிடமும் பேசாமல் ஏகாந்தத்தில் இருந்து பழகவேண்டும்" என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்துள்ளார். ஏகாந்தத்தில் மௌனம் ஆக இருக்கின்றபோது நம் உள்ளத்திலிருந்து தெய்வீக எண்ணங்கள் தோன்றி வருகின்றன என்ருல் நாம் நல்ல சாதகர்கள் ஆகின்ருேம். ஏகாந்தத்தில் இருந்துகொண்டு பிரார்த்தனையும், நம் ஜீவிதத்தைப்பற்றிய சிந்தனையும், பரமன் மகிமையைப்பற்றிப் பேசியும் வந்தால் நமக்கு உண்மை நன்கு விளங்கும். நாம் உலகுக்குத் தனியாக வந்தோம். உலகத்தை விட்டுப் போகும் போதும் தனியாகத்தான் போவோம். இடையில் உற்ருர் உறவினர் என்று சொல்லும் கூட்டத்தோடு உலகில் வாழ்ந்து வருகின்ருேம். அப்படி வாழ்ந்து வருகின்ற நாம் நாள்தோறும் அயர்ந்த உறக்கத்தில் அனைத்தையும் விட்டுப் பிரிகின்ருேம். அப்படிப் பிரிவது அவசியமாகின்றது. இவ் உலகத்தவர்களோடு கொண்டுள்ள இணக்கத்தைப் பிரிக்கலாகாது என்று எண்ணித் தூங்காமல் இருப்போமானல் நமக்குப் பைத்தியம் பிடித்துவிடும். விழிப்பு நிலையில் சமுதாயத்தோடு இணக்கம் கொள்கின்ருேம். ஆழ்ந்த உறக்கத்தில் அவ்விணக்கத்தைத் தகர்த்தெறிகின்ருேம். இதை அவசி

யம் செய்தாக வேண்டும். விழித்திருக்கின்ற நிலையில் ஏகாந்தத்தில் இருந்துகொண்டு மௌனத்தையும் கடைப்பிடித்துப் பழகவேண்டும். அப்போது இப்பிரபஞ்ச வாழ்வு நீர்மேல் குமிழி போன்று நிலையற்றதாகத் தோன்றும். பிரபஞ்ச வாழ்வு எந்த நேரத்தில் வேண்டுமானாலும் முடிவுக்கு வரலாம். வாழ்ந்திருக்கும் காலமெல்லாம் கடவுள் சிந்தனையில் இருந்து பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழ்வதுதான் உசிதம் என்பது அப்போது உறுதியாகின்றது.

சிற்றியல்பு படைத்தவர்கள் பொருந்தாத வார்த்தைகளைச் சுவர்களில் எழுதி வைப்பார்கள். சிலர்புதிய இடத்திற்குப் போனால் அங்குத் தங்கள் பெயர்களை எழுதிவைப்பார்கள். இப்படிப் பொது இடங்களைப் பாழ்படுத்துபவர்கள் இருக்கின்றார்கள். சுவரில் யாரும் எழுதுவதோ சாய்வதோ கூடாது. ஏகாந்தத்தில் இருக்கும் பொழுது நம் மனதின் பண்பாடு விளங்கிவிடும். சுவரில் பொருந்தாதவற்றை எல்லாம் எழுதுவது போன்று மனதில் பொருந்தாத எண்ணங்கள் ஏகாந்தத்தில் தோன்றி வருமானால் அது மனம் பண்பாடு அடையவில்லை எனக்காட்டுகிறது.

தன்னடக்கமே வடிவெடுத்தவனாக இருந்து பழகுவது மனதைப் பண்படுத்துகின்ற தவம் ஆகின்றது. மனதின் நோக்கம் எப்போதும் பரிசுத்தமாயிருக்க வேண்டும். யுதிஷ்டிரனையும் துரியோதனனையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். துரியோதனனுக்குக் கஷ்டதசை வந்தபோதெல்லாம் யுதிஷ்டிரன் அவனை உடன் பிறந்த தம்பியாகக் கருதி அவனுக்கு நலத்தையே செய்கின்றான். ஒரு சமயம் பாண்டவர்களை அவமானப்படுத்துவதற்காகக் கௌரவர்கள் கூட்டம் பாண்டவர்கள் இருந்த வனத்திற்குச் சென்றார்கள். பாண்டவர்கள் வசித்து வந்த ஆச்ரமத்திற்கு முன்பு கௌரவர்கள் கூடாரம் அமைக்கவேண்டும் என்று திட்டம் போட்டார்கள். பாண்டவர்கள் முன்பு அழகிய பட்டாடைகளையும், ஆபரணங்களையும் அணிந்துகொண்டு விருந்து சாப்பிட்டு தாங்கள் எவ்வளவு மேலான நிலையில் இருக்கிறார்கள் என்பதைக் காட்டி பாண்டவர்களை அவமானப் படுத்த விரும்பினார்கள். தெய்வாதீனமாகக் கௌரவர்கள் கந்தர்வர்களிடம் அகப்பட்டுக் கொண்டனர். கந்தர்வர்கள் கௌரவர்களை அடிமைகளாகச் செய்து அழைத்துக்கொண்டு போனார்கள். பரிகாசம் பண்ண வந்தவர்களுக்கு நல்ல வெகுமதி கிடைத்தது என்று எண்ணி பீமன் மகிழ்ச்சி அடைந்தான். ஆனால் யுதிஷ்டிரன் பகர்ந்ததாவது: "கௌரவர்கள் நம் தம்பிமார்களாவார்கள். அவர்கள் கந்தர்வர்கள் கையில் அகப்பட்டுக்கொண்டார்கள். பெண்பாலர்களும் அக்கூட்டத்தில் இருக்கிறார்கள். அவர்களைக் காப்பாற்றுவது நம் கடமையாகும். நான் கொண்டுள்ள விரதப்படி ஆயுதம் எடுக்கக்கூடாது. ஆகையால் பீமனும் அர்ஜுனனும் கந்தர்வர்களிடம் சென்று வேண்டிய முறைகளைக் கையாண்டு கந்தர்வர்களிடமிருந்து கௌரவர்களை மீட்டு வருவார்கள்" என்றார். யுதிஷ்டிரன் உத்திரவுப்படி அர்ஜுனன் யுத்தத்திற்குக் கிளம்பினான். அர்ஜுனனுக்கு இந்திரலோகத்தில் பயிற்சி கொடுத்த சித்திரசேனன் அர்ஜுனனைப் பார்த்ததும் ரதத்தைவிட்டுக் கீழே இறங்கினான். அர்ஜுனன் சித்திரசேனனைக் கீழே வீழ்ந்து வணங்கினான். "எதற்காக எங்கள் தம்பிமார்களைக் கட்டிப் பிடித்துக்கொண்டு செல்கின்றீர்கள்?" என அர்ஜுனன்சித்திரசேனனைக் கேட்டான். "அவர்கள் உங்களைப் பரிகாசம் பண்ண வந்தார்கள். அவர்களுக்குத் தண்டனை கொடுப்பதற்காகஅழைத்துச் செல்கின்றோம்" என்றான் சித்திரசேனன். அவர்களை உங்களிடமிருந்து விடுவிக்க வேண்டுமென்பது எங்களுடைய அண்ணாவின் உத்திரவு என்றான் அர்ஜுனன். "அப்படியானால் அவர்களை விட்டுவிடுகின்றேன்" என்று சித்திரசேனன் கௌரவர்களை விட்டுவிட்டான்.

யுதிஷ்டிரன் போன்று எல்லாச் சூழ்நிலைகளிலும் நல்ல மனம் படைத்தவர்களாக இருக்க வேண்டும். நல்ல மனம் படைத்திருப்பது தவத்தின் விளைவாக அமைகின்றது. எத்தகைய கஷ்டதசை வந்தாலும் நல்ல மனம் படைத்தவர்கள் நல்ல மனப்பான்மையை விட்டு நழுவுவதில்லை. யுதிஷ்டிரன் அதற்கு நல்ல எடுத்துக்காட்டாகின்றார்.

பாண்டவர்கள் சொர்க்கத்தை நோக்கிச் சென்றபோது யுதிஷ்டிரனைத் தவிர மற்றவர்கள் வழியிலேயே விழுந்துவிடுகின்றார்கள்.

யுதிஷ்டிரன்மட்டும் கீழேவிழாமல் செல்கின்றார். நாய் ஒன்று அவரைப் பின்பற்றிச் சென்றது. சொர்க்கத்தில் இருந்து விமானம் ஒன்று யுதிஷ்டிரனை அழைத்துப்போகக் கீழே வந்தது. யுதிஷ்டிரன் விமானத்தில் ஏறியபொழுது அவருடன் சென்ற நாயும் வாலை ஆட்டிக் கொண்டு விமானத்தில் ஏறியது. இந்திரன் சொர்க்கத்தில் நாய்க்கு இடமில்லையென்று அதைத் தடுத்தான். "என்னை நம்பிவந்த நாயைப் புறக்கணித்துவிட்டு நான் சொர்க்கத்துக்கு வர மாட்டேன்" என்றார் யுதிஷ்டிரன். இது மன பரிபாகத்தின் உச்சநிலையாகும். உம் தம்பிமார்களனைவரும் கீழே விழுந்தபோது ஏன் திரும்பிப் பார்க்கவில்லை?" என்றான் இந்திரன். "திரும்பிப்பார்த்திருந்தால் நானும் வீழ்ந்திருப்பேன்" என்றார் யுதிஷ்டிரன். யுதிஷ்டிரன் சொன்னதில் கருத்து இருக்கிறது. "தீமையில் ஈடுபட்டிருப்பவர்களோடு நாம் சேர்ந்தால் நாமும் கீழ் நிலைக்கிறங்கிவிடுவோம்." "என் தம்பிமார்களுடைய நிலையை அறியாது நான் சொர்க்கத்திற்கு வரமாட்டேன்" என்றார் யுதிஷ்டிரன்.

"அவர்கள் சரீரத்தோடு சொர்க்கத்திற்குப் போக முடியாது. சரீரத்தை ஒதுக்கிவிட்டு அவர்கள் சொர்க்கத்திற்குப் போய்விட்டார்கள்" என்றான் இந்திரன். "என்னை நம்பி வந்த நாயும் என்னுடன் சொர்க்கம் வரவேண்டும்" என்றார் யுதிஷ்டிரன். "சொர்க்கத்தில் நாய்க்கு இடமில்லை. தம்பிமார்களோடு நீங்கள் சொர்க்கத்தில்இருக்க விரும்புகின்றீர்களா? நாயோடு பூலோகத்தில் இருக்க விரும்புகின்றீர்களா?" என்றான் இந்திரன். "நாய் அல்ப ஜந்துவாக இருக்கலாம். என்னை நம்பி வந்த நாய் எவ்வளவு அல்ப ஜந்துவாக இருந்தாலும், நான் அதைப் புறக்கணிக்க மாட்டேன்" என்றார் யுதிஷ்டிரன். யுதிஷ்டிரனுடைய வார்த்தைகளெல்லாம் தூய மனதினின்று வந்தவார்த்தைகளாகும். அவருடைய தியாகத்தின் உச்ச நிலை இங்கு வெளியாகிறது. யுதிஷ்டிரனுடைய தியாகத்தை நேரில் பார்த்து திருப்திஅடைந்த தர்மதேவதை நாயாக இருந்த வடிவத்தை மாற்றித் தர்மதேவதையாக நின்றது. தர்மதேவதை பகர்ந்ததாவது:"நீ வாழ்வு முழுவதும் தர்மத்தை அனுஷ்டித்தாய். நாய் விசுவாசத்தோடு எஜமானனைப் பின்பற்றுவதுபோன்று தர்மதேவதையாகிய நான் மறைமுகமாக உன்னைப் பாதுகாத்தேன். நீ தர்மஸ்வரூபி" என்று தர்மதேவதை கூறிச் சொர்க்கத்திற்கு அழைத்துக்கொண்டு சென்றது. எத்தகைய சோதனை வந்தவிடத்தும் மனத்தூய்மை மாறாமல் இருப்பதற்குத் தர்மராஜாவின் வாழ்வில் நடந்த இந் நிகழ்ச்சி சான்றாகிறது.

மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களையும் நல்ல பாங்கில் பயன்படுத்தினால் நாம் நாள்தோறும் தவத்தில் ஈடுபட்டவர்கள் ஆகின்றோம். மனம் தெய்வச் சிந்தனையிலும், தெய்வீக உணர்விலும் மூழ்கியிருக்க வேண்டும்." வாக்கு தெய்வத்தின் மகிமையைப் போற்றவேண்டும். தெய்வக்கிருத்தியங்களைக் காயம் செய்து வரவேண்டும். இங்ஙனம் முக்கரணங்களையும் நல்ல பாங்கில் பயன்படுத்தி வரவேண்டும். தவத்தின் வாயிலாக நம்மிடம் உள்ள தெய்விக சம்பத்து மேலும் மேலும் வளர்கின்றது. தவம் நம் நாட்டின் செல்வமாகும். நாம் வழிபடுகின்ற தெய்வங்கள் எல்லாம் தவ சொருபங்களாக இருக்கின்றார்கள். இராமன், தர்மன் ஆகியோர்கள் தவத்தின் வாயிலாகவே பூலோக வாழ்க்கையைப் பெருநிலைக்குக் கொண்டுவந்தார்கள். அவர்கள் போன்று நாம் அனைவரும் தவத்தில் ஈடுபடக் கடமைப்பட்டிருக்கின்றோம். முக்கரணங்களையும் சரியான பாங்கில் பண்படுத்துவது நல்ல தவம் ஆகிறது. நம் உலக வாழ்க்கைக்கிடையில் அருள் நிறைந்த தெய்விக வாழ்க்கை வாழலாம். தவத்தின் வாயிலாகத் திரிகரணங்களையும் மேல்நிலைக்குத் திருப்புவோமானால் நம்மை மேலோராகத் திருத்தியமைக்கலாம். நம்மை மேலோராகத் திருத்தி அமைப்பது வாழ்வின் குறிக்கோள். யக்ஞம், தானம், தவம் ஆகியவற்றைச் செய்வதன் மூலம் தெய்வ சொருபங்களாக நாம் மாறி அமைகின்றோம். யக்ஞம், தானம், தவத்தில் ஈடுபட்டால் வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வத்தின் அருளுக்குப் பாத்திரமாகின்றோம். மானுட வாழ்வை யக்ஞம், தானம், தவம் செய்வதில் பயன்படுத்தி வருவோமாக. இறைவனருள் உள்ளத்தில் குடிகொண்டிருந்து நமக்குச் சதா துணைபுரிந்து வருவதாகுக. (முற்றும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 124

713. गुरुमण्डलरूपिणी குருமண்டல ரூபிணீ—வாழையடி வாழையாக வந்துள்ள குருமார்களின் வடிவத்திலிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

சிவனிடமிருந்து நந்தீஸ்வரன் அனுக்ரஹத்தைப் பெற்றதாகவும் அந்த நந்தீஸ்வரனிடத்திருந்து முடிவில்லாது குரு சிஷ்ய பரம்பரை எக்காலத்திலும் வந்து கொண்டிருக்கிறது என்பதும் ஐதிகம். கருத்துக்களைப் புஸ்தகங்களில் எழுதி வைக்கலாம். ஆனால் உயிர்த் தத்துவம் ஓர் உயிரிடத்திருந்து மற்றோர் உயிர் சந்தானமாக உத்பவிப்பதற்கு நிகராக ஆத்ம போதம் குரு சிஷ்ய பரம்பரையிலேயே சர்வ காலமும் நிகழ்ந்து வருகிறது. வேறொரு பாங்கில் பகருமிடத்து எரிகிற தீபத்திலிருந்து மற்றொரு தீபம் ஏற்றப் பெறுகிறது. இதே போக்கில் ஆதியந்தமில்லாது எக்காலத்தும் குரு சிஷ்ய பரம்பரை நிலவுலகில் நிலவி வருகிறது. இந்தக் குரு சிஷ்ய பரம்பரை மயமாக அன்னை பராசக்தி இலங்குகிறாள். அவளுக்குப் புறம்பாக இந்த ஆத்மபோதத் தொடர்பை நிலைபெற வைத்திருக்க முடியாது. அவளுடைய அனுக்ரஹத்தாலேயே இத்தொடர்பு யாண்டும் காப்பாற்றி வரப்படுகிறது.

அண்மையில் தோன்றிய அம்பிகையின் பக்தராகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அன்னையின் ஆத்ம சைதன்யத்தை மக்கள் யாரிடத்திலிருந்தும் ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார். அன்னை தானே உள்ளத்தினுள்ளே இருந்து அனுக்ரஹம் பண்ணவேண்டும் என்று பிரார்த்தித்தார். அன்னை பராசக்தியும் அவருடைய அருள் நாட்டத்துக்கு இணங்கி ஆத்ம போதத்தை வழங்கியருளினாள். அதன் பிறகு பலப்பலச் சம்பிரதாயங்களைக் கடைப்பிடித்து வந்த ஞான குருமார்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரோடு தொடர்பு பூண்டு அந்தந்த சம்பிரதாயத்துக்குரிய மார்க்கங்களைக் காட்டியருளினார்கள். அவைகளை ஒன்றன்பின் ஒன்றாக அனுஷ்டித்துப் பார்த்துத் தாம் நேரே அன்னையின் அருளால் பெற்ற அனுபூதியின் கண்ணே இம்மார்க்கங்கள் யாவும் ஆத்ம சாதகனைக் கொண்டு சேர்க்கின்றன என்பதை அறியவந்தார். இதினின்று உண்மையொன்று நமக்குத் தோன்றுகிறது. குரு மண்டலத்துக்கு எப்பொழுதுமே அழிவு கிடையாது. ஆர்வத்தோடு அனுபூதியை நாடுகிற ஆத்ம சாதகர்களுக்குத் தங்குதடையின்றி அம்பிகையின் அனுக்ரஹம் வந்தமைகிறது. அன்னை பராசக்தி மூர்த்திகளை முகாமையாக வைத்துக் கொண்டு இந்த ஞானக் கொடையை நிறைவேற்றி வைக்கிறாள். தானே பரிபாகம் அடைந்துள்ள சாதகனுடைய உள்ளத்தினுள்ளே பிரசன்னமாகி ஞானத்தை நல்குவதும் அவளுடைய பாங்கு ஆகும். இது யாண்டும் குரு சிஷ்ய இணக்கத்தாலேயே நிறைவேறி வருகிறது. ஏட்டுக்கல்வி இதற்கு உதவமாட்டாது. அன்னையைச் சரண்புகுந்திருந்தால் குரு சிஷ்ய பரம்பரை வாய்ப்பை ஏதேனும் ஒருவிதத்தில் அவள் நிறைவேற்றி வைக்கிறாள்.

714. कुलोत्तीर्णा குலோத்தீர்ணா—குலத்துக்கப்பால் இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

குலம் என்னும் பதத்துக்குப் பொருள்கள் பல உள. இங்கு குலம் என்னும் பதத்துக்குப் பொருள் அகக்கரணங்கள், புறக்கரணங்கள் ஆகியவைகளின் சமூகமாம். மனம், சித்தம், புத்தி, அகங்காரம் ஆகிய நான்கும் அகக்கரணங்கள் அல்லது அந்தக்கரணங்கள் ஆகின்றன. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தும் பாகியகரணங்கள் அல்லது புறக்கரணங்களாகின்றன. இக்கரணங்கள் யாவும் பிரபஞ்சத்தைப் பொருள்படுத்துவதற்கு உதவுகின்றன. பிரபஞ்சத்திற்கு அப்பாலுள்ள ஆத்ம சைதன்யத்தைக் கிரஹிக்க இவைகள் உதவமாட்டா. ஏனென்றால் சைதன்யமாக உள்ள அம்பிகை இக் கருவிகரணங்களுக்கு அப்பாற்பட்டவள்.

அப்படியானால் ஜீவாத்மாக்களாகிய நாம் படைத்திருக்கின்ற இக் கருவிகரணங்கள் எவ்விதத்திலாவது ஆத்ம சாதனத்துக்கு உதவமாட்டாவா என்னும் கேள்வி எழுகிறது. பிரபஞ்சத்தைப் பொருள்படுத்துதற்கு உதவி வருகிற கரணங்களை நியாசம் பண்ணினால் சொரூப தியானத்துக்கு அவைகள் ஓரளவு

உதவுகின்றன. கண்கொண்டு காண்பதை யெல்லாம் கடவுள் மயமாகக் காண்பது நியாசம். அதே பாங்கில் ஐம்பொறிகளையும் அம்பிகையின் வழிபாட்டுக்கே பயன்படுத்தினால் அவைகளின் செயல்கள் மேன்மையுறுகின்றன. அந்தக்கரணங்கள் யாவையும் அம்பிகையின் ஆராதனைக்கே பயன்படுத்தினால் அவைகள் தெளிவுறுகின்றன. சுத்தியடைந்து வருகிற கருவிகரணங்கள் பிறகு ஓய்ந்து போகின்றன. அவைகள் ஓய்ந்துபோனவிடத்து அம்பிகையின் சாந்நித்தியமே எஞ்சி நிற்கிறது. ஆதலால் அவள் குலோத்தீர்ணை குலத்தைத் தாண்டி இருப்பவள் அல்லது கருவி கரணங்களுக்கு எட்டாது அப்பாற்பட்டவளாக இருப்பவள் என்பது தேற்றம். 'கருவிகரணங்கள் ஓய்ந்த தொண்டர்களிடத்தோ நீ வீற்றிருப்பது' என்னும் ஆப்த வாக்கியம் இந்த நாமத்துக்கு ஒத்ததாக இருக்கிறது.

**715. भगाराध्या** பகாராத்யா — சூரிய மண்டலத்தில் ஆராதிக்கப்படுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஸவித்ரு பகவதிக்கு பகா என்பது மற்றொரு பெயர். தோற்றுவிப்பவள் என்பது பொருள். தோற்றுவிப்பதால் அவள் சாவித்திரியாக இலங்குகிறாள். சூரிய மண்டலத்தில் சிறப்பு ஒன்று உண்டு. உலகமனைத்தையும் சூரிய மண்டலம் தோற்றத்திற்குக் கொண்டு வருகிறது. வெளிச்சம் வெப்பத்தின் வாயிலாக சூரியமண்டலம் உலக முழுதுக்கும் உயிரூட்டுகிறது. சூரிய தேவதை யாண்டும் இருந்தது இருந்தபடி இருப்பதால் அத்தேவதை பரப்பிரம்மத்தின் பிரத்தியக்ஷ சொரூபமாகிறாள். அத்தகைய பேராற்றலும் பேரொளியும் வாய்க்கப்பெற்றுள்ள தேவியை அந்தக்கரணத்தில் ஆவாஹனம் பண்ணி ஆராதிப்பது நல்ல வழிபாடு ஆகிறது. அந்தக்கரணத்தில் வைத்து உபாசிப்பதால் இந்த உபாசனை பிறர் யாருக்கும் புலப்படுவதில்லை. அந்த அளவில் அது ரகசியமான வழிபாடு ஆகிறது.

சிவசக்தியின் கூட்டுறவால் தோற்றத்துக்கு வந்துள்ள ஜகத்தும், தோற்றத்துக்கு அப்பாலுள்ள பரநிலையும் குறிக்கப்படுகின்றன. அம்பிகையின் வழிபாட்டில் அவளுடைய தோற்ற நிலை தோன்றாத நிலை ஆகிய யாவும் அடங்கியிருக்கின்றன. பக ஆராத்யத்தில் இத்தனை கோட்பாடுகளும் அடங்கியிருக்கின்றன.

**716. माया** மாயா — மாயையின் வடிவினளாய் இருப்பவள் என்பது இதன் பொருள்.

வெளிப்படையாகத் தோற்றத்திலிருப்பதை மறைத்து வைக்கும் பாங்குடையவள் மாயா சக்தி. சிப்பியை வெள்ளியாகக் கருதுவதும், கயிற்றைப் பாம்பாகக் கருதுவதும் மாயாசக்தியின் வல்லமையால் அமைவனவாம். மாரீசன் மாயமானாக வடிவெடுத்து வந்து பஞ்சவடியில் வனவாசம் பண்ணிய சீதையை மயக்கினான். அந்த மயக்கத்துக்குச் சீதை உட்பட்டாள். பிறகு ராமனும் உட்பட்டான். ஆனால் லட்சுமணன் எச்சரிக்கை பண்ணினான். அப்படியிருந்தும் சீதையும் இராமனும் அவ் வடிவத்தை மான் என்றே பொருள்படுத்தினார்கள். இது மாயையின் வல்லமை. மானுடன் ஒருவன் எவ்வளவு விவேகம் படைத்திருந்தாலும் மாயைக்கு அடிமைப்படுகிறான்.

மானுடன் ஒவ்வொருவனும் உறக்கத்தில் சொப்பனவஸ்தையில் இருக்கின்றபொழுது அவனவனுடைய மனப்பான்மைக்கேற்ற ஜகத்தைக் கற்பித்துக்கொள்ளுகின்றான். இல்லாததை இருப்பது போன்று கற்பித்துக்காட்டும் திறமை வாய்க்கப்பெற்றது மாயை.

யா மா சா மாயா என்பது மாயைக்கு ஒரு விளக்கம். யாதொன்று ஒரு கணப்பொழுதுக்கு முன்பு இருந்ததுபோன்று ஒரு கணப் பொழுதுக்குப் பின்பு இருப்பது இல்லையோ அது மாயை. இவ்வுலகை மாயப் பிரபஞ்சம் என்கிறோம். ஓயாது வடிவம் மாறியமைந்துகொண்டு வருவதால் இதற்கு மாயை என்னும் பெயர் வந்துள்ளது. பிரபஞ்சத்துக்கு நிகராக நமது உடலமைப்பும் மாயா காரியமாம். பிறந்தது முதற்கொண்டு க்ஷணந்தோறும் பூதங்களின் போக்குவரத்தை முன்னிட்டு இந்த உடல் சதா மாறியமைந்துகொண்டிருக்கிறது. அதற்குத் தோற்றமும் மறைவும் இருப்பது வெளிப்படை. ஆயினும் அதைச் சதம் என அதில் நம்பிக்கை வைப்பது மாயையின் விளையாட்டாம்.

மாயாதேவியாக இலங்குகின்ற அம்பிகையின் துணைகொண்டே மாயையின் மயக்கத்தினின்று நம்மை விடுவித்துக்கொள்ள நாம்

முயலவேண்டும்.

717. मधुमती மதுமதீ—தேனோடு கலந்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உணவு வகைகளுள் உயர்ந்த நிலையிலிருப்பது தேன். சத்து நிறைந்த மேலான உணவு உடலுக்கும் உள்ளத்துக்கும் பிராணனுக்கும் பெரிதும் பயன்படுகிறது. பயன்படாது மலமாகக் கழிக்கப்படும் பகுதி மிகக் குறைவு. அங்ஙனம் மேன்மை தங்கிய உணவுகளுள் உச்ச நிலையிலிருப்பது தேன். அதில் எப்பகுதியும் மலமாகப் புறக்கணிக்கப்படுவதில்லை. உடலுக்கும் உள்ளத்துக்கும், உயிருக்கும் ஆதரவு அளிக்க வல்லது மது. அத்தகைய மது மயமாயிருப்பவள் அன்னை பராசக்தி. பராவித்தைக்குப் பிரம்மவித்தையென்றும் ஸ்ரீ வித்தையென்றும் மதுவித்தை யென்றும் பெயர்கள் அமைந்திருக்கின்றன. மது என்னும் சொல் பரம்பொருளாகிய பிரம்மத்தையே குறிக்கின்றது. ஆதலால் அம்பிகை மதுமயமாக இருக்கிறாள் என்று இயம்புதலில் பொருள் உண்டு. அன்னை பராசக்தி இகம் பரம் ஆகிய இரண்டுக்கும் மேன்மையளிக்கின்றாள். இகத்திற்கு இன்றியமையாத சம்பத்துக்களை யெல்லாம் அவள் தாராளமாகப் பக்தர்களுக்கு வழங்குவதால் அவள் மது வடிவினள் எனப் போற்றப்படுகிறாள். பரம்பொருளை யடைவது ஜீவர்களின் முடிவான குறிக்கோளாகிறது. பரம்பொருளை அடைதலில் இனிமையும், மகிமையும் சேர்ந்தமைந்திருக்கின்றன. ஆதலால் அம்பிகை மதுமதீ எனப் போற்றப்பெறுகிறாள்.

யோகிகள் பலப்பல சாதனங்கள் புரிந்து மேல் நிலைக்கு வருகிறார்கள். மேல் நிலைகள் ஏழு படித்தரங்களாகப் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றன. ஏழாவது படித்தரத்துக்குத் தாரகம் என்பது பெயர். அம்பிகையை வழிபடுகிறவர்கள் இந்தக் கடைசிப் படித்தரத்தையும் எளிதில் தாண்டி மேல் நிலைக்குப் போக வல்லவராகின்றார்கள். மதுமதீ என்னும் நாமத்தில் இக்கோட்பாடும் அடங்கியிருக்கிறது.

718. मही மஹீ—பூமி வடிவத்திலிருப்பவள் என்பது இதன் பெயர்.

அன்னை பராசக்திக்குப் புறம்பாக இம்மையிலோ மறுமையிலோ ஏதுமில்லை. அனைத்துமாய் இலங்குபவள் அவளே. அவ் அனைத்தினுள் மிக ஸ்தூலமாக இருப்பது பூமி. நமக்குக் கட்புலனாகும் ஜீவராசிகளனைத்துக்கும் இருப்பிடமாயிருப்பது பூமி. பூமியில் முக்கால் பங்கு மகா சமுத்திரங்கள் மயமாக இருக்கிறது. இந்த சமுத்திரங்களைத் தாங்கிக்கொண்டிருப்பதும் பூமி. ஆதலால் நீர்வாழ்வன அனைத்துக்கும் நிலவுலகமே இருப்பிடமாகிறது. பறப்பன யாவும் வானத்தில் சஞ்சரிப்பவைகள் போன்று தென்படுகின்றன. ஆயினும் பறவையினங்கள் யாவும் தங்கியிருப்பதற்கும் ஓய்வு எடுத்துக்கொள்வதற்கும் மரங்களிடத்து வருகின்றன. சில பறவைகள் நிலத்தில் வந்து தங்குகின்றன. இன்னும் சில பறவைகள் நீரில் வந்து மிதக்கிக்கொண்டிருக்கின்றன. ஆதலால் நீந்துவன, நடப்பன, பறப்பன ஆகிய உயிர்வகைகள் அனைத்துக்கும் வாசஸ்தலமாயிருப்பது மஹீ அல்லது பூமி. அன்னை பராசக்தி தானே பூமியாகப் பரிணமித்து உயிர்களை ஓம்பி வருகின்றாள்.

பொறைக்கு இருப்பிடம் பூமி என்பது கோட்பாடு. பூமியை யார் யார் என்னென்ன பாங்குகளில்எல்லாம் வெட்டிப்பாழ்படுத்தினாலும் அச்செயல்களையெல்லாம் பூமி பொறுத்துக்கொண்டிருக்கிறது. பாழ்படுத்துகிறவர்களுக்குப் பிரதி தீங்கு எதையும் பூமி செய்வதில்லை. தனக்குப் பண்ணுகிற கேடுகளையெல்லாம் சகித்துக்கொண்டு தன்னிடத்து வாழ்ந்து வருகின்ற உயிர்வகைகள் யாவுக்கும் பூமாதேவி நலனையே வழங்கி வருகின்றாள். அது அம்பிகையின் மகிமையாம். மஹீயாக மிளிர்ந்து கொண்டு ஜீவர்களுக்கு நலனையே செய்வது அவளுடைய இயல்பு.

பூமி வடிவிலிருக்கும் இயற்கைத்தாய் ஜீவர்களைப் பரமாத்மாவோடு கொண்டு சேர்க்கிறாள். பரத்தை அடைவதற்குரிய சாதனைகள் பூலோக வாழ்வில் நடைபெற்று வருகின்றன. கர்மம் பூமியில் நிகழ்வதால் இது கர்ம பூமி என்று அழைக்கப்படுகிறது. உயிர்களுக்கு மேலாம் நிலை பூலோக வாழ்க்கையில் அமைவதால் இது புண்ணிய பூமி ஆகிறது. அம்பிகை பூமி வடிவத்திலிருந்து இத்தகைய நலன்களை உயிர்களுக்குச் செய்துவருகிறாள்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (183)** *சிதம்பர ரகசியம் என்பது யாது?*

ரகசியம் என்பதில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒன்று வியாபார சம்பந்தமானது. அதை trade secret என்பார்கள். மற்றது தத்துவ விளக்க சம்பந்தமானது. சில பொருள்களை நல்லமுறையில் உற்பத்தி பண்ணுகிற விதம் யாரோ சிலர்க்குத்தான் தெரியும். மற்றவர்களுக்கு அதை அவர்கள் காட்டித் தரமாட்டார்கள். தாங்கள் உற்பத்தி பண்ணும் பொருள் நல்லமுறையில் நல்லஊதியத்துக்கு விற்கப்படவேண்டும் என்னும் கருத்துடன் பொருள் உற்பத்தியை ரகசியமாக வைத்திருக்கிறார்கள். அது இவ்வுலக சம்பந்தமான ஊதியத்தின் பொருட்டுக் கையாளப்படுகிறது. ஆசையை அது அடிப்படையாகக் கொண்டது. அது பாராட்டத்தக்க ரகசியமன்று. சிதம்பர ரகசியமென்பது பரதத்துவ சம்பந்தமான மேலாம் கோட்பாடு. விளக்கினாலும் எல்லார்க்கும் அது பிடிபடாது. ஆதலால் அது ரகசியம் எனப்படுகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஆத்மா அழிவற்றது என்பது பொது மக்களுக்கு ரகசியம். ஆனால் அனுபூதி அடையப் பெற்றுள்ள ஞானிக்கு நண்பகல் போன்று அது வெட்டவெளியான உண்மை. சிதம்பர ரகசியம் என்பது இந்த கோட்பாட்டில் அடங்கியிருக்கிறது. பரவஸ்து சகுண பிரம்மமாகவும், நிர்க்குண பிரம்மமாகவும் இலங்குகிறது. சகுண பிரம்மசொரூபமாகஇருப்பது தில்லை நடராஜா. ஆத்ம பரிபாகம் அடைந்துள்ள ஆத்ம சாதகர்கள் நடராஜ தத்துவத்தை அறிகிறார்கள். நடராஜாவின் சந்நிதிக்கு வலது பக்கம் சிதம்பர ரகசியம் என்பது அமைக்கப் பெற்றிருக்கிறது. நடராஜாவுக்குப் பண்ணுகிற தீபாராதனை சிதம்பர ரகசியத்துக்கும் பண்ணப்படுகிறது. திரும்பவும் அதே தீபாராதனை நடராஜாவின் சந்நிதியில் வந்து பூர்த்தியாகிறது. மனபரிபாகம் அமைந்துள்ள ஆத்ம சாதகர்கள் நடராஜ தத்துவத்தை எளிதில் அறிந்துகொள்ளலாம். ஆனால் கருவி கரணங்களுக்கு எட்டாத பரசிவம் ஜீவாத்மாக்களுக்கு என்றைக்குமே எட்டாததாயிருக்கிறது. ஆதலால் அது சிதம்பர ரகசியம் எனப்படுகிறது. ஆத்மஞானிகளுக்குச் சிதம்பர ரகசியம் ஒன்றே வெட்டவெளியாயிருக்கிற மெய்ப்பொருள். நடராஜ தத்துவம் உள்பட ஏனைய யாவும் சுத்த மனதுக்கு இலக்காகி அந்த மனம் ஒடுங்குகிறவிடத்து அதற்கு இலக்காக அந்தக் காட்சியும் ஒடுங்கிப் போகிறது. ஆதலால் ஞானிகளுக்கு இரண்டாந்தரத்திலிருக்கும் நடராஜ தரிசனம் வியாவகாரிக சத் ஆகிறது. பாரமார்த்திக சத்தாயுள்ள சதாசிவம் அல்லது பரசிவம் அல்லது பரப்பிரம்மம் ஒன்றே நிர்விகாரமாய், நிராமயமாய், நிர்க்குணமாய் யாண்டுமுள்ள மெய்ப்பொருள். இவ்வுண்மை பரஞானம் அடையப்பெறாதவர்களுக்கு விளங்காது. ஆதலால் இது சிதம்பர ரகசியம் எனப்படுகிறது.

**கேள்வி (184)** *மக்களுடைய உள்ளத்தை உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொண்டிருக்கிற அகங்காரத்தை அகற்றுவது எப்படி?*

அகங்காரம் அரசமரத்தோடு ஒப்பிடப்படுகிறது. அரசமரத்தை எவ்வளவுதான் வெட்டினாலும் மீண்டும் மீண்டும் அது தளிர்த்துக் கொண்டே இருக்கும். அதே விதத்தில் அகங்காரத்தை அகற்ற முயன்றால் அது அகற்றப் பெற்றது போன்று தென்படுகிறது. ஆயினும் அது திரும்பத் திரும்பத் தலையெடுத்துக் கொண்டே இருக்கிறது. அத்தகைய அகங்காரம் என்பது யாது என்பதை ஆத்மசாதகன் முதலில் அறிந்துகொள்ள வேண்டும். ஜீவாத்ம அமைப்பில் புருஷ தத்துவமும், பிரகிருதி தத்துவமும் சேர்ந்து இருக்கின்றன. புருஷ தத்துவம் பிரகிருதி தத்துவத்தைத் தன்மயமாய் ஏற்றுக்கொள்வது அகங்காரம். புருஷன் வேறு, பிரகிருதி வேறு என்று பாகுபடுத்தி புருஷ தத்துவத்திலேயே யாண்டும் உறுதியாக நிலைத்திருப்பவர்கள் நிறைஞானிகள். அன்னவர்களை அகங்காரம் தீண்டமாட்டாது. அகங்காரத்தின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருக்கிறவர்கள் எல்லாரும் ஜீவாத்மாக்களேயாம். அகங்காரத்தை அறவே வெட்டித் தகர்த்தவர்களே நிறைஞானிகள் ஆகிறார்கள்.

அகங்காரத்தை வெல்லுதற்கு இடையருத விசாரமும் இறைவனுடைய அருளும் சேர்ந் திருப்பது அவசியம். கட்டுதற்குக் கயிறு உதவுகிறது. ஆனல் வெந்துபோன கயிறு சாம்பல் வடிவெடுத்துக் கயிறுபோன்று தென் படுகிறது. ஆனல் அது கட்டுவதற்கு உத வாது. பரஞானம் ஒன்றே அகங்காரத்தை அகற்றுதற்கு உற்ற உபாயம். பரஞானம் பரம்பொருளின் அருளால் வாய்க்கும் பரியந் தம் ஆத்மசாதகன் அகங்காரத்தைச் சர்வேசு வரனேடு இணைத்து வைத்துப் பயன்படுத்து தலில் கேடு இல்லை. தான் அல்லாத உட லைத் தான் என்று உணர்வது அகங்காரம். அந்த உடலையொட்டி ஜாதி, மதம், மொழி, நாடு ஆகிய உபாதிகளெல்லாம் தொடர்ந்து வருகின்றன. இவை யாவையும் தனக்கு உரியவைகளாக அபிமானிக்காது பரநாட்டத் துக்கென்றே பயன்படுத்தி வந்தால் இந்த அகங்காரம் மனிதனைக் கட்டுப்படுத்தாது. பிறகு பரஞானத்தில் அது அறவே அழிந்து பட்டுப் போகிறது. அதுவரையில் அகங்கா ரத்தை ஈசனுடைய வழிபாட்டுக்கென்றே பயன்படுத்தி வரவேண்டும். அப்படிச் செய் கிற ஆத்மசாதகன் அகங்காரத்தின் ஆதிக்கத் தினின்று தன்னை விடுவித்துக் கொள்கிறன்.

கேள்வி (185) இக்காலத்தில் பலரால் போற்றப்பட்டுவருகிற சான்றேர் ஒருவர் தம்மைக் கடவுளின் சொரூபம் என்று கூறு கிறர். இதை ஏற்றுக்கொள்ளலாமா?

ஆதி பகவன் முதற்றே உலகு என்பது பொய்யாமொழி. உலகனைத்தும் ஆனய் நீயே என்பதும் பொய்யாமொழி. பரம் பொருளே பிரபஞ்ச சொரூபமாகக் காட்சி கொடுத்துக் கொண்டிருக்கிறர் என்பதும் மறை மொழி. ஆதலால் மக்கள் அறிந்திருந்தாலும், அறியாதிருந்தாலும் ஜீவகோடிகளனைத்தும் அண்டகோடிகளனைத்தும் பரம்பொருளிடத் திருந்தே வந்தவைகளாம். இது அடிப்படை உண்மை. இந்த உண்மைக்கு ஒப்ப உயிர் களோடு உயிர்கள் மேலாம் இணக்கம் வைப் பது பாராட்டுதற்குரிய நல்லிணக்கமாகிறது. இதினின்று சற்று விலகிய மானுடனெருவன் தான் மட்டும் கடவுளின் சொரூபம் என்றே, கடவுளின் அவதாரம் என்றே தன்னை விளம் பரப்படுத்திக்கொள்வானுகில் அந்த மனிதனைப் பற்றி மிக எச்சரிக்கையாக இருக்கவேண்டும். தெய்வீக அம்சம் சிறப்பாக ஒரு மனிதனிடத்து அமைந்து இருக்குமாகில் அம்மனிதன் தன் தரத்துக்கேற்ற சிஷ்யக்கூட்டத்தை உருவாக்கு கிறன். புத்தர், இயேசுநாதர், ஆதிசங்கரர், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் ஆகியவர்களி டத்து தெய்விக அம்சம் சிறப்பாகப்பொலிந்து கொண்டிருந்தது. 'தக்கார் தகவிலர்' என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும் என்னும் மறைமொழிக்கு அப்பெருமக்கள் அமைத்து வைத்திருந்த சிஷ்யர் கூட்டங்களே சான்று களாகின்றனர். இப்பொழுது தம்மைக் கடவு ளின் சொருபம் என்று சொல்லிக்கொள்ளுகிற சான்றேர் மேலான சிஷ்யர்கூட்டத்தை அமைப் பாராகில் அவரைத் தெய்விக அம்சம் என்று ஏற்றுக்கொள்ளலாம். அப்படித் தகைசான்ற மேலோரை உருவாக்காது வெறும் விபூதியை இங்குமங்கும் படத்திலிருந்து விழச் செய்தா லும், கனி வர்க்கங்களைக் கையில் வரவழைத்தா லும் அத்தகைய செயல்களை வெறும் அபிசார பூஜையின் விளைவு என ஒதுக்கித்தள்ள வேண் டும். அபிசாரபூஜை என்பது தந்திர சாத னத்தின் ஆரம்பதசையிலிருக்கும் ஒருவித வழி பாடு ஆகும். அந்த வழிபாட்டு முறைப்படி சில பொருள்களை ஓரிடத்தில் வைத்துக் கிரியை கள் செய்து முடித்துவிட்டு மற்றேர் இடத்தி லிருந்து கையை நீட்டினல்வைக்கப்பட்டஇடத் திலிருந்து பூஜைபண்ணியவருடைய கைக்குப் போய்ச்சேரும். மக்களை மயக்குதற்கு இச் செயல்கள் பயன்படும். மக்களை மேலோராக்கு தற்கு இவை உதவமாட்டா. ஆதலால் அபிசார பூஜையில் ஈடுபட்டிருக்கிற மனிதனைப் பற்றி மக்கள் மிக எச்சரிக்கையாக இருக்கவேண் டும். தம்மைப் பார்க்க வந்த பக்தனெருவனுக்கு இந்தச் சான்றேன் கையை உயர்த்தி அதில் பழம் ஒன்று வரச் செய்து அப்பழத்தை வந்தி ருந்த பக்தனிடம் கொடுத்தார். பக்தனே 'கடை யில் நாலணு கொடுத்து இப்பழத்தை நான் வாங்க முடியும். இது எனக்கு வேண்டாம். மனம் ஒடுங்குதற்கு வழிகாட்டித் தாருங்கள்' என்றான். தம்முடைய மனதையே அடக்கி யாளத்தெரியாத ஒருவர் பிறருடைய மனதைப் பண்படுத்த எங்ஙனம் வல்லவராவார்?

# பிரம்மச்சரிய விரதம்

(சுவாமி துருவானந்தர்)

[400ஆம் பக்கத் தொடர்ச்சி]

நம்நாட்டு விளையாட்டு வீரர்கள் ஜெர்மனிக்கு கிரிக்கெட் விளையாடச் சென்றார்கள். ஜெர்மன் நாட்டினரை விளையாட்டில் திணற அடித்தனர் இந்திய வீரர்கள். இந்த நிகழ்ச்சி ஹிட்லர் ஆட்சியில் நடந்ததாகச் சொல்லப்படுகிறது. சாமானியமாகத் தென்பட்ட இந்தியர்கள் உடல் சளைக்காது, முகமலர்ச்சியோடு வெற்றிமேல் வெற்றி பெற்றுத் தந்ததைக் கண்டு ஜெர்மானியர் வியந்தனர். வியந்தது மட்டுமன்று, இந்த வெற்றிக்குக் காரணத்தை ஆராய ஆரம்பித்தார் ஹிட்லர். ஆராய்ச்சியின் முடிவு அவர்களைத் திகைப்படையச் செய்தது. மணவாழ்வை விரும்பாத நல்ல இளைஞர்கள் தங்களுடைய தூயபிரம்மச்சரியத்தால்தான் அங்ஙனம் வெற்றி வாகை சூடினர் என்று முடிவுகட்டினர். இன்றைய நம்நாட்டு விளையாட்டு வீரர்கள் அதை அறிந்திருக்க வேண்டும். எத்தகைய விளையாட்டு வீரர்களாக இருந்தாலும், எத்தகைய சூட்சுமங்களையெல்லாம் கற்றிருந்தாலும் முறையான பிரம்மச்சரிய விரதம் அவசியம். சமீபகாலத்தில் நடந்த டென்னிஸ் போன்ற இதர விளையாட்டுக்களிலும் முடிசூடா மன்னராக, உலகமெல்லாம் சுற்றிவந்து வெற்றிமுரசு கொட்டியவர்கள் எல்லாரும் மணவாழ்வில் புகுந்த பிறகு அவர்கள் இருக்குமிடம் தெரியாது வாழ்கின்றனர் என்றால், பிரம்மச்சரியத்தால் சக்தியைச் சேர்த்து வைத்து அதை நாட்டு நலனுக்குப் பயன்படுத்தும் மனிதனே வாழ்வாங்கு வாழ்ந்தவனாவான்.

பிரம்மச்சரியம் காக்கப் பொருத்தமான சூழ்நிலை மிகவும் அவசியம். பிறக்கும் பொழுதே எல்லாரும் ஒரேமாதிரியான மனநிலையில் பிறக்கிறார்கள் என்று சொல்லுவதற்கில்லை. சூழ்நிலை மூலம் கீழான மனநிலையையும் மேலான நிலையாக மாற்ற முடியும் என்பதற்கு ஏராளமான சான்றுகள் கூறலாம். இதைக் குறித்துத்தான் Nurture is greater than Nature என்ற கொள்கை வந்துள்ளது. பயிற்சியால் எதையும் மாற்றியமைத்துவிட முடியும். நாம் அனைவரும் ரிஷிபுத்திரர்கள் என்றார் விவேகானந்த சுவாமிகள். ரிஷிபுத்திரர்களாகிய நம்மிடம் பிரம்மச்சரியம் போன்ற பண்பும், சத்தியம், தர்மம் போன்ற அறநெறிகளும் உள்ளனவா என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். நல்லவர்கள் வாழுகிற நாட்டில் மாதம் மும்மாரி மழை பொழிந்ததாகக் கூறுகிறார்கள். ஆனால் இன்றோ இயற்கை பண்ணுகிற சீற்றத்தை என்னவென்பது! மழை இன்றைக்குப் பெய்யாது கெடுக்கிறது; அல்லது பெய்துகெடுக்கிறது. பாண்டவர்கள் தலைமறைவாக விராட நாட்டில் வாழ்ந்து வந்தனர். அவர்களை யாரும் அடையாளம் கண்டுகொள்ளாதபடி விராட அரசனுடைய அரண்மனையில் ஒவ்வொருவரும் வேலையேற்று மறைந்து வாழ்ந்து வந்தனர். அப்போது பாண்டவர்களைத் தேடுவதில் தீவிரமாக இருந்த துரியோதனன் பிதாமகர் பீஷ்மரிடம் அவர்கள் எங்கு வாழ்ந்திருப்பார்கள் எனக்கேட்டான். பொய் பேசியறியாத பீஷ்மரும் "எங்கு மழை முறையாகப் பொழிந்து, நாடு செழித்துக் குடிமக்கள் மகிழ்ச்சியோடு வாழுகிறார்களோ, ஆங்குப் பாண்டவர்கள் இருப்பார்கள்" என்று குறிப்பால் உணர்த்தினார். ராமன் இருக்குமிடம் அயோத்தி என்று சொல்லுவது போல் நல்லவர்கள் வாழுமிடம் நாராயணனுடைய வைகுண்டம் ஆகிறது. ஆங்கு இலட்சுமி கடாட்சத்துக்கு என்ன கேட்கவா வேண்டும்! பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து வாழுகிற சான்றோர் எங்குள்ளனரோ அவர்களின் திருவடி பட்டமாத்திரத்தில் பெருமழை பெய்யக் கூடும் என்பதை விளக்க இராமாயணத்தில் நிகழ்ச்சி ஒன்று வருகிறது. தசரத மன்னனின் நண்பர் ஒருவர் தன்னுடைய நாட்டில் மழை பெய்து குடிமக்கள் செழிப்புற்று வாழவழி என்ன என்று ரிஷிகளைக் கேட்டார். முனிகுமாரனாகிய ரிஷ்யசிருங்கர் நாட்டிற்குள் வந்து காலடி எடுத்து வைத்தால் மழை பொழியும் என ரிஷிகள் பலர் கூறினர். அரசனும் அவ்விதமே செய்வதாகக் கூறி முனிவருடைய மைந்தரான ரிஷ்யசிருங்கரைத் தன்

நாட்டிற்கு அழைத்துவர ஏற்பாடு செய்தான். முனிகுமாரரை வஞ்சகமாக அழைத்துவர கன்னிப் பெண்கள் சிலர் அவர் இருக்கும் கானகத்திற்குச் சென்றனர். அவரை அழைத்துவரச் சென்ற மங்கையர் விப்ரவாலிபனைக் கண்டு கனிகளையும் சுவைமிக்க தின்பண்டங்களையும் கொடுத்து உண்ணச் செய்தனர். பிறந்தது முதற்கொண்டே பெண்பாலரைப் பார்த்திராத அவர் அம்மங்கையரை ஏதோ ஒரு அதிசயமான உயிர்கள் என்றே எண்ணினர். இருந்தாலும் உள்ளத்தில் ஏற்பட்ட சலனம் அவர்கள் உடன்புறப்பட்டுப் போகும்படி செய்தது. உலகியலறிவே இன்னும் வளர்ச்சியுறாத அந்த தூய இளைஞரைத் தையலர் சிலர் தங்களோடு தங்கள் நாட்டுக்கு அழைத்து வந்தனர். அப்புனிதர், அந்நாட்டின் எல்லையில் கால்வைத்தவுடன் மழை 'சோ, வெளப்பொழிய ஆரம்பித்தது. அரசனும், மக்களும் இதைக் கண்டு வியப்புற்று பிறப்பிலிருந்தே பிரம்மச்சரியம் காத்த அம் மாதவரைத் தொழலாயினர். அவரைச் சிறந்த சூழ்நிலையில் வைத்துக் காம வாசனையே ஏறாத அளவுக்கு நைஷ்டிக பிரம்மச்சாரியாய் உருவாக்கியவர் அவருடைய தந்தை. பொருள் செல்வம் இன்றிருக்கும் நாளை போய்விடும். ஆனால் குழந்தைகளை முறையாக வளர்க்க வேண்டும். பிரம்மச்சரிய வாழ்வை அவர்களுக்குப் புகட்டி உருவாக்கி வந்தால் அவர்கள் மகாத்மாக்கள் ஆவார்கள். தங்கள் பிள்ளைகளைச் சான்றோர்களாக்கி அவையத்து முந்தியிருக்கச் செய்ய வேண்டுமானால் பெற்றோர்கள் குழந்தை வளர்க்கும் பொறுப்பில் முழுக்கவனம் செலுத்த வேண்டும்.

நாம் இப்பொழுது எந்திரமயமான உலகில் வாழ்ந்து வருகிறோம். எங்குப் பார்த்தாலும் ஒரே பரபரப்பு. பணம் சம்பாதிப்பதற்காக வென்று கணவனும் மனைவியும் போட்டி போட்டுக்கொண்டு பெற்றெடுத்த பிள்ளைகளைக்கூடக் கவனிக்கமுடியாது வேலைக்காரியிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றுவிடுகின்றனர். கூலிக்கு வேலைபார்க்கிற வேலைக்காரியிடம் வளர்ந்துவருகிற பிள்ளைகளின் உள்ளத்தில் எப்படி உயர்ந்த இலட்சியத்தை, தெய்விகத் தன்மையைக் காணமுடியும்? வேளைக்குச் சோறுபோட்டு வளர்த்தால் உடல் அளவில் வளர்ச்சியிருக்குமே யொழிய மனத்தளவில் எப்படி உயர்ந்த பண்புகள் குடிபுகும்? சிறு வயதில் பொறுப்பில்லாது குழந்தைகளை வளர்த்துவிட்டுப் பின்னர் அவன் அடங்காப் பிடாரியாக, ஊதாரியாக, முரடனாக, திருடனாக வந்தால் அதற்கு யார் காரணம்? பல பெற்றோர்களுக்குத் தங்களின் பிள்ளைகளின் முகத்தைக்கூட பார்க்கவோ, இரண்டொரு வார்த்தை பேசவோ வாய்ப்பிருப்பதில்லை. குழந்தைகள் தூங்கிக் கொண்டிருக்கும் பொழுது அதிகாலையில் வேலைக்குப் போவார்கள். பிறகு இரவு வேலை முடிந்து அவர்கள் வீட்டிற்கு வருகிறபொழுது குழந்தைகள் படுத்து உறங்கிக்கொண்டிருக்கும். இங்ஙனம் காலம் பறந்தோடிக்கொண்டிருக்கிறது. விடுமுறை நாட்களில் பெற்றோரைப் பார்த்துப் பேசப் பிள்ளைகள் விரும்பினால் பெற்றோர்கள் அன்றும் வீட்டில் தங்காது வெளியூர் சென்றுவிடுகின்றனர். இந்நிலையில் குழந்தையின் மனதைச் செம்மைப்படுத்த எப்படி முடியும்?

பண்டைக் காலத்தில் குருகுலவாசம் செய்வது என்று ஒரு வழக்கம் இருந்தது. அரசகுமாரன் முதல், ஆண்டிவரை யாரும் ஆங்குக் கற்கலாம். மனிதன் பெறவேண்டிய பண்புகளத்தனையையும் அக்குருகுலத்திலே முறையாகக் கற்பித்தனர். அதன் விளைவாகச் சான்றோரின் தொகை பெருகியது. குருகுல வாசம் செய்யும் பிரம்மச்சாரிகள் அதிகாலையில் நான்கு மணிக்கே எழுந்து நித்திய வழிபாட்டில் ஈடுபட்டு வந்தனர். தவறாது சூரிய நமஸ்காரம், யோகாசனங்கள் போன்ற உடலுக்கு வலுவூட்டும் பயிற்சிகளைச் செய்து நோயின்றித் திண்ணிய சரீரம் படைத்தவர்களாக இருந்தனர். குறித்தவேளையில், பசியின்பொருட்டு எளிய உணவினை ஏற்றுவந்தனர். குருகுல வாசம் செய்த பிரம்மச்சாரிகள் சேவையின் சிகரமாகத் திகழ்ந்தனர். பணிவின் உறைவிடமாக வாழ்ந்தனர். அவர்கள் கல்விக் கடலாக விளங்கினர். எளியவாழ்க்கை உயர்ந்த நோக்கம் தான் அவர்களின் குறிக்கோள். இத்துடன் அவர்களிடம் மிளிர்ந்து வந்த பிரம்மச்சரியம் அவர்களைத் தெய்வீக புருஷர்களாக்கியது. இத்துடன் தவமும் அவர்களுடன் இணைந்து உருவானதால் அவர்கள் தவச்

சிரேஷ்டர்கள் ஆனார்கள். ஆதலால் அவர்கள் எண்ணியதை எண்ணியாங்கு செய்து முடிக்கும் யோகிகளாகத் திகழ்ந்தார்கள். இத்தகைய சான்றோர்களின் இணக்கத்தை அரசன் உட்பட அனைவரும் நாடிவந்தனர்.

ஆனால் இன்றோ அதிகாலையில் எழுந்திருக்கும் மாணவர்கள் மிகச்சிலர். அவ்வாறு எழுந்திருப்பவர்களிலும் கடவுள் வழிபாட்டில் அந்த நேரத்தைக் கழிப்பவரைக் காணுதல் அரிது. உடற்பயிற்சி என்பதைப் பள்ளியில்ஆசிரியரின் வற்புறுத்தலுக்குச் செய்வார்களே தவிர மனப்பூர்வமாக உடல் நலனுக்காகச் செய்யமாட்டார்கள். அதன் விளைவாக நோயுற்ற சரீரமும், கிழத்தனமும் இக்கால இளைஞர்களுக்கு வந்து விடுகின்றன. பிரம்மச்சரியம் காத்த பண்டைய குருகுல இளைஞர்களிடம் பிரம்ம தேஜஸ் ஜொலித்தது.விந்து விரயம்செய்யும் இன்றைய இளைஞர்களின் முகத்தில் கவலையும், பீதியும், சஞ்சலமும் தென்படுகின்றன.பத்திரிகைகளும், இப்போது வெளிவரும் கதைப் புத்தகங்களும் இவர்களிடம் உள்ள காமவேட்கையை வளர்க்கின்றன. நாடு அழிவை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது என்பதற்கு இவைகளெல்லாம் காரணங்களாக இருக்கின்றன.

சீதையைத் தேடிக்கொண்டுபோன ராமனுடனும் இலக்குவனுடனும் நட்புப் பூண்டான் சுக்ரீவன்.அப்போது சுக்ரீவனிடமிருந்த குரங்குகள் சில துணிப்பொட்டலங்களைக் கொண்டு வந்து ராமன் முன் பணிவுடன் சமர்ப்பித்தன. அவற்றைத் திறந்து பார்த்துக் கண்ணீர்வடித்த ராமன் இலக்குவனை நோக்கி'தம்பி,இவைகளைப் பார்த்தாயா? இவையனைத்தும் உன் அண்ணி சீதை அணிந்திருந்தது'என்றான்.அதற்கு இலக்குவன்"அண்ணா! நான் சீதாப்பிராட்டியின் திருவடியைத்தான் பார்த்துள்ளேன். அவர் அணிந்திருந்த நகைகளை நான் பார்த்ததில்லை" என்றான். அவன் தூய பிரம்மச்சாரியாயிருந்ததால் தான் மகா தவவலிமை படைத்த இந்திரஜித்தை வெல்லமுடிந்தது. இலக்குவனின் இந்தத் தூயமனநிலையை இக்கால இளைஞர்கள் கொண்டிருக்கவேண்டும்.

பெரியவர்களிடம் பணிவாக அவர்கள் இட்ட ஆணையைச் சிரமேற்கொண்டு செயலாற்றி அடக்கத்துடன் வாழ்ந்தனர் குருகுலமாணவர்கள். ஆனால் இன்றோ பெற்ற தாய் தந்தையரின் முன்னிலையில் வீழ்ந்து நமஸ்காரம் பண்ணுகிற மாணவர்கள் எத்தனைபேர்? அவர்களைக் கடைசிக் காலம்வரையில் பராமரித்துத் தெய்வமாகப் பாவித்து மனங்குளிர போஷிக்கும் பிள்ளைகள் எத்தனைபேர்? இந்தக் குறைகளை நிவர்த்திக்க சான்றோர்கள் புகட்டுகிற செந்நெறிகளை இன்றைய மாணவர்களிடம் புகட்டவேண்டும். இதைச் செயலில் கொண்டு வர அரசாங்கம் பண்டைய குருகுலக் கல்வி முறையைக் கொண்டுவரவேண்டும்.

பிரம்மச்சரியம் அனுஷ்டித்தால் உடல் கெடும் என்பது உண்மையன்று. "விந்து விட்டவன் நொந்து கெட்டான்" என்று பழமொழி வழங்கி வருகிறது. சிறுவன் ஒருவன் பதின்மூன்று வயது அடைகிறபொழுது உடலில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன. முதல் மாற்றம் குரல் மாறியமைவதாகும். உள்ளத்திலும் கீழான எண்ணங்கள் வரும். வயது ஆக ஆக மிருகத்தனமான காம எண்ணங்கள் அதிகம் இடம் பெறும். இந்த நேரங்களில் நல்ல துணை வேண்டும். இல்லையேல் பொருந்தாத பழக்கவழக்கங்களில் ஈடுபட்டுத் தங்களிடம் உள்ள விந்து சக்தியை எவ்விதமேனும் விரயம் செய்து மிருகங்களாக மாறிவிடுவார்கள். பெற்றெடுத்த பெற்றோர், ஆசிரியர் இவ்விஷயத்தில் கூச்சத்திற்கு இடம் கொடாது இவர்களின் நலனை முன்னணியில் வைத்துக் காம எண்ணத்திற்கு இடம் தராத, பேராற்றலும், பலமும், தன்னம்பிக்கையும் கொண்ட வாழ்வை வாழ்ந்து காட்டிய பெரியவர்களின் சரிதத்தை இவர்களுக்கு விளக்கியருளவேண்டும். ஆனால் இன்றோ வயதுவந்த இளைஞர், யுவதிகளைவைத்துக்கொண்டு மணவாழ்வைப் பற்றிப்பேசுவதில் வீட்டிலுள்ள முதியவர்கள்முனைகின்றனர். அவர்கள் உள்ளத்தில் காமநோயை உட்புக விடாது தெய்விக வாழ்க்கை வாழும்படி செய்தால் அவர்கள் உண்மையில்கண்கண்ட தெய்வமேஆவார்கள்.சென்றதை மறந்துஇந்தத்தலைமுறையினராவது இந்த விரதத்தில் நிலைபெற்றுப் பழைய ஐதிகத்தைப் பின்பற்றி வாழ்ந்து வருவார்களானால் நம் நாடு மற்றைய நாடுகளுக்கு முன்மாதிரியாகத் திகழும். அந்நாளை விரைவில் எதிர்பார்ப்போமாக. (முற்றும்)

---

# தெய்வீக இயல்புகள்

( 424 ஆம் பக்கத் தொடர்ச்சி )

உள்ளத்தில் தெளிவு உண்டாகும் பொழுது புத்தியில் தெளிவு உண்டாகிறது. நாம் வாழ வேண்டிய நெறியைத் தெளிந்த புத்தி விளக்கிக் காட்டுகிறது. தெளிந்த மனதில் சாட்சிப் பொருளாக இருக்கும் ஆத்மாவின் சாந்நித்தியத்தை உணரலாம். மனம் தூய்மை ஆக ஆக அதன்கண் தெளிவு வந்து கொண்டே இருக்கிறது. நித்திய அநித்தியப் பொருள்களைப் பாகுபடுத்தி அறிந்து கொள்ளக்கூடிய விவேகம் தூய மனதுக்குச் சொந்தம் ஆகிறது. பரத்தைப் பற்றிய அறிவையே ஞானம் என்கின்றோம். அவ் அறிவு பஞ்சேந்திரியங்களுக்கு எட்டாததாகிறது. இந்திரியங்களுக்கு வசப்பட்டு இருப்பவர்களுக்கு ஞானம் தோன்றுவதில்லை. அவர்கள் மனம் உயர்ந்த விஷயங்களைக் கிரகிப்பதில்லை. தூய மனது இந்திரியங்களைக் கடந்து அப்பால் செல்லுகின்றது. அம்மனதுக்கே பரம்பொருள் விளங்குகிறார். தூய மனம் படைத்தவர்கள் எண்ணுகின்ற எண்ணங்களும், சொல்லுகின்ற சொற்களும், செய்கின்ற செயல்களும் அறத்துக்கு உட்பட்டவைகளாக இருக்கின்றன. ஞானம் வந்தால் பின் நமக்கென்ன வேண்டும்? என்கின்றார் பாரதியார். ஞானத்தைப் பெற்றவன் வாழ்க்கையில் அனைத்தையும் பெற்றவன் ஆகின்றான். அவன் செய்சின்ற செயல்கள் எல்லாம் அறத்துக்கு விளக்கமாக அமைகின்றன. ஞானத்துக்கு உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவது அடிப்படையாக அமைகின்றது. சாதனைகள் எல்லாம் சித்த சுத்திக்காகவே செய்யப்படுகின்றன. சித்தம் சுத்தியான பிறகு ஞானம் உண்டாகிறது. சித்தம் சுத்தி அடையாதவர்கள் ஞானம் பெறுவதை மெத்தக் கடினம் என்கின்றனர். சித்தம் சுத்தி அடைந்தவர்களுக்கு ஞானம் பெறுவது மெத்தச் சுலபம் ஆகின்றது.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்

என்பது வள்ளுவர் வாக்கு. செயற்கரிய செயல் ஞானம் பெறுவது ஆகும். மனத்தூய்மை பெற்றவர்கள் பெரியவர்கள் ஆகிறார்கள். மனத்தூய்மை இல்லாதவர்கள் சிறியவர்கள் ஆகிறார்கள். மனத்தூய்மை பெற்றவர்கள் பாக்கியவான்கள். மனத்தூய்மை தெய்வீக இயல்பு ஆகும். மனத் தூய்மை என்னும் தெய்வீக இயல்பைப் பெறுவதற்கு இறைவன் அருளைச் சார்ந்திருந்து தீவிரமாக முயன்று வருவோமாக.

ஞானம் பெற்றவர்கள் தங்கள் வாழ்வினை நித்தியப் பொருளாகிய பரம்பொருளினிடத்து ஒப்படைக்கின்றார்கள். ஞானம் வருகின்ற பொழுது நம் உடல் அமைப்பே மாறியமைகின்றது. கோபுரமானது ஆலயத்தை ஞாபகம் ஊட்டுவதுபோன்று உடலானது ஆத்ம சொருபத்தை ஞாபகம் ஊட்டவேண்டும். யாருடைய உடல் பிறருடைய உள்ளத்தில் தெய்வச் சிந்தனையை ஊட்டுகின்றதோ அவருடைய உடல் ஆலயமாகின்றது. உள்ளத்தைப் பெரும் கோவிலாக ஆக்கி அமைத்தவர்களிடத்தில் தெய்வத்தின் சான்னித்யத்தை உணரலாம். ஞானம் வருவதின் விளைவாக உடலை ஆலயமாகவும் உள்ளத்தைப் பெருங்கோவிலாகவும் மாற்றி அமைக்கின்றோம். புலன்கள் கள்ளப் புலன்கள் ஆகின்றன. பொருந்தாத இன்பத்தின் கண் புலன்கள் நம்மை இழுத்துச் செல்லுகின்றன. புலன்களை நம்பி மனிதன் ஏமாந்து வருகின்றான்.

"கண் முன் காண்பதுதான் உண்மை. கண்ணுக்குத் தென்படாத கடவுள் எப்படி உண்மைப் பொருள் ஆவார்?" என்று கூறுவது புலன்களை நம்பி வாழ்கின்றவரது கூற்றாகும். புலன்களுக்கு அடிமைப்பட்ட மனிதன் புலன்கள் காட்டுவதை மெய்யென்று நம்பி விடுகின்றான். புலன்கள் மூலம் பிரபஞ்சம் புலனாகிறது. பிரபஞ்சம் உண்மையில் இல்லை. ஞானம் வந்தான பிறகு அவ்வுண்மை விளங்குகின்றது. "கடவுளைக் கண்டதுண்டா"? என்னும் வினாவை விவேகானந்தர் கிளப்பினார். அக்கேள்விக்கு யாரும் விடை பகர இயலவில்லை. இறுதியாக விவேகானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்தார். இராமகிருஷ்ணர் புலன்களை முற்றும் வென்று ஞானம் வாய்க்கப் பெற்றவராக இருந்தார். "கடவுளைக் கண்டதுண்டா?" என்

னும் கேள்வியை விவேகானந்தர் அவரிடமும் கேட்டார். இராமகிருஷ்ணர், "ஆம்,குழந்தாய்; நான் கடவுளைக் காண்கின்றேன்; நான் உனக்கும் அவரைக் காட்டுவேன். ஊனக் கண்ணைக் கொண்டு நான் உன்னைத்தெளிவாகக் காண்பது போன்று ஞானக்கண்ணைக் கொண்டு நான் கடவுளைத் தெளிவாகக் காண்கின்றேன். உனக்கும் ஞானக்கண்ணைத் திறந்து கடவுளைக் காட்டமுடியும்" என்றார். ஞானக் காட்சி உண்டாகின்ற பொழுது ஊனக்கண் காட்சி பொருளற்றதாய்ப் போய்விடுகின்றது. தெய்வக் காட்சி காண்கின்றவர்கட்கு உலகக் காட்சி இல்லை. உலகக் காட்சி காண்கின்றவர்களுக்குத் தெய்வக் காட்சி இல்லை. புலன்களுக்கு அடிமைப்பட்டிருப்பவர்கள் உலகக் காட்சி காண்கின்றனர். புலன்களை வென்றதீரர்கள் தெய்வக் காட்சி காண்கின்றார்கள்.

"மரத்தை மறைத்தது மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதற்பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற்பூதமே"

என்பது திருமூலர் வாக்கு. மரத்தால் ஒரு யானை செய்யப்பட்டு வைத்திருந்தது. அதைத் தூரத்திலிருந்து ஒருவன் பார்த்தான். அது அவனுக்கு நிஜயானையாகத் தென்பட்டது. அதன் அருகில் செல்ல அவன் பயப்பட்டான். அந்த யானை அசையாமல் நின்றது. அசையாதிருப்பதைப் பார்த்ததும் அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. ஒரு கல்லை எடுத்து அதன்மீது விசியெறிந்தான். கல் அதன்மீது பட்டது. அது மரமென்பதை அறிந்தான். அவன் யானையாகப் பார்த்த பொழுது அவன் காட்சியில் மரம் இல்லை. அவன் அதை மரமாகப் பொருள்படுத்திய பொழுது யானை என்ற காட்சி மறைந்து போய்விட்டது. அவன் யானையாகப் பார்த்த போதும் அங்கு மரம் தானிருந்தது. மரத்தை யானையாகப் பார்த்தது திரிவுபட்ட காட்சியாகும். மரத்தை மரமாகவே பார்த்தது தெளிந்த காட்சியாகும். உண்மையில் பரம்பொருள்தாம் இருக்கின்றார். பரம்பொருளை உலகமாகக் காண்பது திரிவுபட்ட காட்சியாகிறது; பரம்பொருளாகக் காண்பது மெய்க் காட்சி ஆகும். ஊனக்கண்ணுக்குப் பிரபஞ்சமும் ஞானக்கண்ணுக்கு மெய்ப்பொருளும் தென்படுகின்றன. "புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க" என்பது மாணிக்க வாசகர் வாக்கு. கடவுளுக்கு வெகு தூரத்தில் இருக்கின்றவர்கள் ஐம்பொறிகள் வாயிலாகப் பஞ்சபூதங்களாலான இப்பிரபஞ்சத்தைக் காண்கின்றனர். பஞ்சேந்திரியங்கள் காட்டித்தருகின்ற இப்பிரபஞ்சத்தை நாம் மெய்யென்று நம்புகின்றோம். ஆனால் பிரபஞ்சம் மெய்யன்று. ஜாக்ரத நிலையிலிருக்கும் பிரபஞ்சம் சொப்பன நிலையில் இல்லாததாய்ப் போய் விடுகின்றது. எனவே பிரபஞ்சம் மெய்ப்பொருள் ஆகாது. ஞானம் வந்த பிறகு பஞ்சபூதங்களாலாகிய இவ்வுலகத் தோற்றம் மறைகிறது. அப்பொழுது மெய்ப்பொருளாக இறைவன் தென்படுகின்றார்.

ஞானக்கண் கொண்டு காண்கின்ற இடத்து உண்மை உள்ளபடி ஒளிர்கின்றது. கள்ளப் புலன்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்ற போது பொய்க்காட்சி தென்படுகிறது. பொய்க் காட்சியையே மெய்யென்று நம்புகின்றோம். புலன்கள் தரும் மயக்கத்தில் அழுந்திப் போய்ப் பொய்யை மெய்யென்றே நம்பி வருகின்றோம். திருமால் வராகவதாரம் எடுத்துத் தம் செயலை முடித்தான பிறகு பன்றியாகவே சில நாட்கள் வாழ்ந்து வந்தார். பன்றியாக இருந்தபொழுது தம் குட்டிகளோடு சேற்றில் புரண்டு இன்புற்று வந்தார். வைகுண்டத்தில் இருக்க வேண்டிய திருமால் பன்றி வடிவத்தில் குட்டிகளோடு சேற்றில் புரண்டு இன்புற்றிருந்ததைத் தேவர்கள் பார்த்தார்கள். தேவர்கள் வைகுண்டத்தைப் பற்றித் திருமாலுக்கு எடுத்துச் சொன்னார்கள். திருமால் அதைக் கேட்கவில்லை. சிவபெருமான் நேரில் வந்து சொன்ன பொழுதும் பன்றியாக இருந்து குட்டிகளோடு சேற்றில் புரண்டு இன்புற்றிருப்பது தான் சுகம் என்றார். சிவபெருமான் தம் திரிசூலத்தால் திருமாலின் பன்றி உடலைக் குத்தினார். அப்போதுதான் திருமாலுக்குத் தம் யதார்த்த சொருபத்தைப் பற்றிய ஞாபகம் வந்தது. உடனே பன்றி உடலை உதறித் தள்ளிவிட்டு வைகுண்டத்திற்குப் போய்விட்டார்.

திரிசூலம் ஞானத்திற்குச் சின்னமாகின்றது. ஞானம் வருகின்றபொழுது பிரபஞ்சத்தை

உதறித் தள்ளிவிடுகின்ற நிலை உண்டாகின்றது. அப்போது கள்ளப் புலன்கள் ஐந்தும் காளா மணிவிளக்குகள் ஆகின்றன. மனம் பண்பட்டு ஞானம் பெறுவதற்கான தகுதி பெற்றன பிறகு ஐம்பொறிகளும் நம்மை ஏமாற்றுவ தில்லை. அவை ஞானப் புலன்களாக அமை கின்றன. அவற்றின் மூலம் தெய்வக்காட்சி கிட்டுகின்றது. உயிர்கள் வேறு தெய்வம் வேறு என்று பொருள்படுத்துகின்ற நிலை அக் ஞான நிலையாகும். அந்நிலையில் புலன்களுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றோம்.

வாழ்வில் ஞானம் பெறுவதே நம் லட்சியம் ஆகும். சுகம் பெறுதல் வாழ்வின் லட்சிய மன்று. உடல் சுகம் பெறுவதற்காக அறிவைப் பயன்படுத்துகின்றோம். உடல் சுகத்தில் இச்சையேற்பட ஏற்பட நம்மிடம் அக் ஞானம் வளர்ந்து கொண்டே போகிறது. மெய்ஞ்ஞானம் உண்டாகும் பொழுது நாம் ஆனந்த சொருபம் என்பதனை அறிகின்றோம். ஆனந்தத்தை வெளி உலகில் நாடிப் போவ தில்லை. வெளி உலகில் உண்மையில் ஆனந்த மில்லை. ஆனந்தம் நம்மிடத்தில்தான் உள்ளது. அவ்வானந்தத்தை அறிந்து கொள்வதற்கு ஞானம் உண்டாக வேண்டும்.

ஞானம் எப்படி வருகின்றது? உள்ளத் தைத் தூய்மைப் படுத்திக்கொண்டே வந் தால், உள்ளம் தூய்மை ஆக ஆக நீ புலன் களைத் தெய்வக் காட்சிக்காகப் பயன்படுத்து கின்றாய். நீ ஆனந்த சொருபம் என்பதை உணர்வதற்கு அது துணை புரிகிறது.

நாம் பெறும் ஞானம் நிலைத்திருந்தால் அது யோகம் ஆகின்றது. நம் உள்ளத்தில் சிற்சில சமயம் தெளிவு உண்டாகின்றது. ஆனால் மின்னல் போன்று அது மறைந்து விடுகின்றது. வீட்டில் மிக முக்கியமானவர் காலமாய் விட் டால் சிறிது நேரத்திற்கு விரக்தி மனப் பான்மை வரும். சரீரம் பொய்யானது, இவ் உலகம் பொய் ஆனது, இவ் உலக வாழ்வு அழிந்து போகக்கூடியது என்ற எண்ணங்கள் தோன்றும். அப்பொழுது உடல் சுகத்தில் நாட்டம் செல்லாது.

அசோகர் புத்தமதத்தைத் தழுவினர். புத்த பிக்குகளை மரியாதையோடு நடத்தினர். ஆனால் அவருடைய தம்பிக்குப் புத்த பிக்குகளைப் பற்றிய உயர்வான எண்ணமில்லை. புத்த பிக்குகள் புலனின்பங்களை ஒதுக்கித் தள்ளி விட்டதாகப் பாசாங்கு செய்கின்றார்கள். புல னின்பங்களை ஒதுக்குவது சாத்தியமாகாது என்று அவர் எண்ணினர். தம்பிக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டுமென்று அசோகர் நினைத்தார். தம் தம்பி இராஜ்யத்திற்கு எதி ராகச் சூழ்ச்சி செய்தான் என்று தம்பியின்மீது குற்றம் சாட்டிச் சிறைத் தண்டனை விதித்தார். ஏழு நாட்கள் சிறையிலிருக்க வேண்டுமென் றும், ஏழு நாட்களுக்குப் பிறகு மரணதண்டனை என்றும் கூறினர். தம்பி சிறையிலிருந்த ஏழு நாட்களுக்கும் அவர் அனுபவிப்பதற்கு வேண் டிய உலக சுகங்கள் அனைத்திற்கும் ஏற்பாடு செய்து இருந்தார். ஆனல் அவர் ஏழுநாட்களும் மரணத்தைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந் தார். உலக இன்பங்களை அனுபவிக்க வேண் டும் என்ற எண்ணம் மனதில் எழவில்லை. போகத்துக்குரிய பொருள்களை எல்லாம் கண் ணெடுத்தும் பார்க்கவில்லை. ஏழு நாட்களுக்குப் பின்னர் சிறைச்சாலைக்கு அசோகர் வந்து தம் தம்பியைப் பார்த்துக் கேட்டதாவது: "தம்பி! நான் உனக்காக ஏற்பாடு செய்திருந்த போகப் பொருள்களை எல்லாம் நன்கு அனுபவித் தாயா?" அதற்கு அவர் தம்பி, "என்னை உடனடியாகத் தூக்கிலிட்டிருக்கலாம். ஏழு நாட்கள் என்னைச் சித்திரவதை செய்து விட் டீர்கள்" என்றார். அதற்கு அசோகர் கூறிய தாவது: "நீ ஏழுநாட்களுக்குப் பிறகு மரணம் வருகிறது என்று அறிந்தவுடன் உனக்கு உலக இன்பங்கள் சுவையுடையவையாகத் தோன்ற வில்லை; அவைகளை நீ ஒதுக்கித்தள்ளிவிட்டாய். உடல் அழியக்கூடியது என்பதைப் புத்த பிக்கு கள் நன்கு உணர்ந்திருக்கின்றார்கள். எனவே அவர்கள் புலனின்பங்களை அறவே ஒதுக்கித் தள்ளி விட்டார்கள். உடல் அழியக் கூடியது என்பதை அவர்கள் உணர்ந்து விட்டதால் புலனின்பங்களை ஒதுக்குவது அவர்கட்கு எளி தாயிற்று." உடல் அழிந்துவிடும். அதற்கு எப்போது வேண்டுமானாலும் மரணம் வரலாம். இவ் உண்மையை உணருபவர்கள் துறவியர் கள். இவ் உண்மையை முற்றும் உணர்ந்து விட்டால் இந்திரிய சுகங்களைத் துறப்பது எளி தாகின்றது.

உலகம் நிலையற்றதென்பதனை அறிந்துகொள்வது ஞானம். அதை எவ்வளவுக்கெவ்வளவு தெளிவாக அறிகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு ஞானம் நம்மிடத்தில் உறுதிபெறுகின்றது. ஞானத்தின் மூலம்தான் துன்பம் துடைக்கப்பெறுகின்றது. சுவாமி விவேகானந்தர் ஒருதடவை "மக்கள் படுகின்ற துயரங்கட்குக் காரணம் என்ன?" என்னும் கேள்விக்கு "அறியாமை" என்று விடை தந்தார்.

ஞானம் ஸ்திரமாக அமையும் பொழுது யோகம் கைகூடியதாகிறது. ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய நேர் சிஷ்யர் துரியானந்த சுவாமிகள் ஆவார். அவர் யோகாருடராக இருந்தார். அனைத்தையும் அனுஷ்டானத்தின் மூலமாக அடைந்திருந்தார். அவர் அதிகம் பேசமாட்டார். ஆச்ரமத்தில் உள்ளவர்கள் துரியானந்த சுவாமிகளிடம் பாடம் கேட்க விரும்பினர்கள். "மனதிலுள்ள சித்தவிருத்திகளையெல்லாம் அழித்துத் தள்ளுவது யோகம். அதை அனுஷ்டானத்தில் கொண்டு வாருங்கள்" எனச் சுருக்கமாக யோகத்திற்கு விளக்கம் கூறி யோகத்தைச் செயல் முறைக்குக் கொண்டு வரச்செய்தார்.

மனம் பொறிகள் வசப்பட்டு உலக விஷயங்களில் அலைந்துகொண்டுள்ளது. அப்படி அலையும் மனதை அடக்கி வைப்பது யோகமாகின்றது. மனதை எப்படி அடக்குவது என்பதனை அறிந்திருக்க வேண்டும். மனதைத் தூண்டுவது ஆசையாகும். ஆசை ஒழிந்தால்தான் மனம் அடங்கும். ஆசையைக் கடவுள்பால் திருப்பினல் அது நமக்கு அனுகூலமாக இருக்கிறது. உலக ஆசை பொல்லாதது. தெய்வப் பற்று வேண்டப்படுவது. உலகப்பற்றைத் தெய்வப்பற்றுக மாற்றியமைப்பது யோகம்ஆகிறது. தனக்கென்று வாழ்பவன் தெய்வத்திற்கென்று வாழ்வானுகில் அது யோகவாழ்வாகின்றது.

யோகம் என்றல் சேர்த்தல் என்பது பொருள். ஜீவாத்மனைப் பரமாத்மாவோடு சேர்த்து வைக்கின்ற வாழ்வு யோக வாழ்வு ஆகின்றது. பஞ்சேந்திரியங்கள் மூலமாக இறைவனேடு இணக்கம் வைத்துப் பழகினல் அது யோக வாழ்வாகிறது. மனதைத் தெய்வத்தின் மீது திருப்பித்தெய்வத்தோடு இணக்கம் வைத்துப் பழகினல் அது யோகவாழ்வாகும்.

"காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே" என்ற வாசகத்தைப் பார்த்ததும் பட்டினத்தடிகளுக்கு ஞானம் வந்துவிட்டது. அந்த ஞானம் அவரிடத்தில் உறுதியாக நிலைத்துவிட்டது. நாம் அந்த வாசகத்தை எத்தனைமுறை கேட்டாலும் ஞானம் வருவதில்லை. ரமணமஹரிஷி வாழ்விலும் இத்தகைய நிகழ்ச்சி ஏற்பட்டது. ரமணமகரிஷியினுடைய பள்ளிப் பருவத்தில், அவர் பள்ளிக்குப் போகாமலும் படிப்பில் கவனம் செலுத்தாமலும் இருந்தார். அவருடைய தாயும் தமையனும் அவருக்குப் புத்திமதி கூறினர்கள். ஆனல் அவர் அதை ஏற்றுக்கொள்ளாது தம் போக்கில் சிந்தனையை உள் முகமாகத்திருப்பியவண்ணமிருந்தார். தாயும் தமையனும் கோபப்பட்டு "நீ இப்படி இருப்பதைவிடச் செத்துத் தொலையலாமே" என்றனர். அதைக் கேட்டதும் அவருக்கு ஞானம் வந்துவிட்டது. 'நான் செத்தால் என்னுவேன்' என்றெண்ணிப் பார்த்தார். தம்மைச் செத்ததாகப் பாவனை பண்ணினர். தாம் செத்துப் போனதைத் தம்மிடமிருந்த ஒன்று சாட்சியாகப் பார்த்தது. எது சாட்சியாகப் பார்த்ததோ அதை உறுதியாகப் பிடித்தார். அந்தச் சாட்சிப் பொருள்தான் தாம் என்று தெளிந்தார். அப்பொழுது அவர்பெற்ற ஞானத்தினின்று அவர் மாறவே இல்லை. அப்போது தமக்கேற்பட்ட ஞானம் தம்மிடம் உறுதியாவதற்குச் சாதனைசெய்தார். ஞானத்தை ஸ்திரப்படுத்துவது யோகமாகின்றது. அந்த யோக நிலையிலிருந்து நமக்குப் பெருவாழ்வு வருகின்றது.

தன்னிடமுள்ளதைத் தனக்கென்று பயன்படுத்துவது மனதைச் சுருங்கச் செய்கின்றது. தன்னிடம் உள்ளதை மற்றவர்கட்கு அன்புடன் வழங்குவது மனதை விரிவடையச் செய்கின்றது. தனக்குப் பயன்படும் பொருள்கள் பிறர்க்கும் பயன்படவேண்டும் என்று எண்ணி அவற்றை அன்புடன் மற்றவர்களுக்கு வழங்க வேண்டும். தன்னிடம் சுரக்கும் பாலைத் தாய்ப் பசு தன் கன்றுக்குக் கரவாது கொடுக்கின்றது. கன்றின் மீது வைத்த அன்பினல் பசு அங்ஙனம் செய்கின்றது. அங்ஙனம் நம்மிடம் உள்ளதைக் கரவாதுஉயிர்கட்கு வழங்கவேண்டும். உயிர்கள் மீது வைத்த அன்பின் மிகுதியினல் அச்செயல் நிகழவேண்டும். நம்மிடம் உள்ள

தில் பிறர்க்கு எதைக் கரவாது தருகின்றோமோ அது நம்மிடத்துப் பன்மடங்கு பெருகுகிறது. "ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்பது பழமொழி. 'உலகுக்குச் செய்கின்ற உதவி நமக்கே நாம் செய்கின்ற உதவியாகிறது. தனக்குப் பயன் படுவதையெல்லாம் கரவாது மற்றவர்கட்கு எடுத்து வழங்கும் தானத்தில் உச்சநிலையில் இருந்தவன் கர்ணன் ஆகின்றான். கடைசிக் காலத்தில் தானத்தின்பலன் அவன் உயிரைக் காப்பாற்றியது. அந்த நெருக்கடியில் தானத் தின் பலனையெல்லாம் கிருஷ்ணன் பிராம்மண வடிவம் எடுத்துப்போய்க் கர்ணனிடம் தான மாகக் கேட்டார். மகிழ்ச்சியோடு கர்ணன் தானத்தின் பலனையும் தானமாகக் கொடுத் தான். தானம் செய்வதைப் பிரியமாகச் செய்ய வேண்டும். வருத்தத்துடனே முகம் கடுகடுத் துக்கொண்டோ செய்கின்ற தானம் சிறந்த தானம் ஆகாது.

தானம் செய்கின்றவன் பணிவோடு செய்ய வேண்டும். பிறர்க்கு நன்மை தரக்கூடியதைச் சிரத்தையோடு கொடுக்க வேண்டும். 'வலக் கையால் கொடுப்பது இடக்கைக்குத் தெரியக் கூடாது' என்று ஏசுநாதர் பகர்ந்துள்ளார். அதாவது அகங்காரமற்று, கொடுப்பதற்கு வாய்ப்புக்கிடைத்ததேபாக்கியம்என்றுகருதித் தானம் செய்யவேண்டும். இத்தகைய தானத் தின் மூலம் மனம் பண்பாடடைகிறது. மனிதன் புலனடக்கமும் மன அடக்கமும் பழகுகின்ற அளவு அவன் மேலோன் ஆகின்றான். புல னடக்கம் பழகுகின்ற அளவு உடல் சக்தி மனோசக்தியாக மாறுகின்றது. மன அடக் கம் பழகுகின்றபொழுது மனோசக்தி ஆத்ம சக்தியாக மாறுகின்றது. பொறிகளின்மூலம் புறவுலகில் உள்ள விஷயங்கள் புலனாகின்றன. விஷயாதிகளினின்று வரும் சுகத்தை அனுப விக்க வேண்டுமென்ற ஆசையுடன் பொறிகளை விஷயங்களில் செலுத்துவது புலனடக்கம்இன் மையாகும். புறத்திலுள்ள அழகிய வடிவத்தைக் கண்ணால் பார்க்கின்றோம். அவ்வடிவத்திலி ருந்து சுகத்தை அனுபவிக்கலாம் என்ற நோக்கு டன் அவ்வடிவத்தைக் கண்கொண்டு காணக் கூடாது. புற உலகில் இருந்துவரும் ஓசையைக் காதால் கேட்கின்றோம். ஓசையில் மயங்கி ஓசையை உண்டாக்கிய பொருளை அனுபவிக்க விரும்புதல் கூடாது. இங்ஙனம் மற்ற பொறிகள் மூலமாகப் புற உலகப் பொருள்களோடுஇணக் கம் வைக்கின்றபொழுது அவைகளை அனுப விக்கவேண்டும் என்ற ஆசையோடு இணக்கம் வைத்தால் அது புலனடக்கம் இன்மையாகும். மனம் எண்ண அலைகளால் சிதறுண்டு கிடக் கும்போது அது மன அடக்கம் இன்மையாகும். தடாகத்தில் நீர் அசையாதிருப்பதுபோன்று மனம் எண்ண அலைகளால் பாதிக்கப்படாமல் இருக்குமானால் மனம் அடக்கம் பழகி வருவதா கிறது. மனமடங்காமை துன்பத்தை உண்டு பண்ணுகிறது. மனமடங்குகின்ற அளவு துன் பம் நம்மைவிட்டு அகலுகிறது. 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் உண்மை, மன அடக்கம் பழகியவர்கட்கே விளங்குகிறது. தெய்வீக இயல்பு ஓங்கப்பெற்றவர்கட்குப் புல னடக்கமும் மன அடக்கமும் எளிதாகக் கைகூடு கின்றன. புலனடக்கம் பழகியவன் குற்ற மொன்றும் செய்வதில்லை. மன அடக்கம் பழ கியவன் சாந்தியைப் பெறுகின்றான்.

சரீரம் உள்ளவரையில் யக்ஞம் செய்தாக வேண்டும். யக்ஞம் என்பது அக்னி வளர்த்து அதில் நெய்யைச் சொரிவது மட்டுமன்று. தான் செய்கின்ற கர்மத்தின் மூலம் ஒருவன் தன்னைக் கடவுளிடத்தில் ஒப்படைப்பானாகில் அவன் செய்த கர்மம் யக்ஞ கர்மம் ஆகிறது. ஐந்து விதமான யக்ஞங்கள் சொல்லப்பட்டிருக்கின் றன. உயிரோடு வாழ்ந்துவருகின்ற பெற்றோர்க் குச் சரீரத்தாலும் சொல்லாலும் எண்ணத் தாலும் நலம் செய்து வரவேண்டும். காலம் சென்ற முன்னோர்களின் ஆத்மா உயர்கதி அடையவேண்டுமென்று மனதால் எண்ண வேண்டும். இது பிதுர்யக்ஞம் ஆகின்றது. மனிதனைத் தவிர மற்ற சிற்றுயிர்களைக் கடவுள் சொரூபங்களாகக் கருதி அவைகளுக்கு நலன் செய்தால் அது பூதயக்ஞம் ஆகிறது. மக்களைத் தெய்வ சொரூபங்களாகக் கருதி நரசேவையே நாராயண சேவை என்ற மனப்பான்மையோடு தனக்கு அமைந்தகடமையை மக்களுடைய நலம் கருதிச் செய்தால் அது நரயக்ஞம் ஆகிறது. இறைவனுடைய நாமத்தை இடைவிடாது ஜபம் செய்வதும், அருள் நூல்களை ஓதி வரு வதும் ரிஷியக்ஞம் ஆகிறது. முற்றும் நலமே

ஓங்கப் பெற்ற நிறைபொருள் தெய்வமாகின்ளூர். 'நிராசையே தெய்வம்' என்று தாயுமானவர் பகர்ந்துள்ளார். அத்தகைய மேலான பொருள் தன் இஷ்ட தெய்வத்தின் வடிவத்திலிருந்து தனக்கு அருள்புரிந்து வருகின்ளூர் என்று தன் இஷ்டதெய்வத்திற்கு வந்தனை, வழிபாடு, பூஜை முதலியவைகள் செய்வது தேவயக்ஞம் ஆகிறது. இந்த ஐந்துவிதமான யக்ஞங்களும் நாள்தோறும் ஒருவர் வாழ்வில் இடம்பெறவேண்டும். ஐந்து யக்ஞங்களையும் நாள் தோறும் முறையாகச் செய்து வருபவர் மனிதநிலையைக்கடந்துதெய்விகநிலையைஅடைகின்ளூர். மனிதன் தன்னை ஓயாது புதுப்பித்துக் கொண்டே இருக்கவேண்டும். அப்படிப் புதுப்பித்துக்கொள்ளல் தவமாகின்றது. மனிதன் தன்னைத் திருத்தி அமைத்துக்கொள்வதற்காக இவ் உலகுக்கு வந்திருக்கின்ளூன். மனிதன் தன்னைக் கெடுத்துக்கொள்வதற்காக இவ் உலகத்திற்கு வரவில்லை. காயத்தைத் திருத்தி அமைக்கின்ற செயல்கள் காயத்தால் செய்யும் தவமாகிறது. வாக்கைத் திருத்தி அமைக்கும் செயல்கள் வாக்கால் செய்யும் தவமாகிறது. மனதைத் திருத்தி அமைக்கும் செயல்கள் மனதால் செய்யும் தவமாகிறது. தெய்வத்திற்கும், அந்தணனுக்கும், குருவுக்கும், ஞானிகட்கும் காயத்தால் பணிவிடை பண்ணவேண்டும். அந்நான்கு அறச்செயலாளர்களையும் சரீரத்தைக்கொண்டு விழ்ந்து வணங்க வேண்டும். நல்லுணவு கொடுத்து, உடற்பயிற்சி செய்து, ஸ்நானம் செய்து சரீரத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். நேர்மையான செயல்களில் சரீரத்தை ஈடுபடுத்துதல் வேண்டும். சரீரத்தில் உண்டாகும் வீரியமாகிய விந்துவை விரயம் பண்ணுது காக்கும் பிரம்மச்சரிய விரதத்தைச் சரீரத்தின் மூலம் அனுஷ்டிக்க வேண்டும். இது சரீர மயமான தவமாகிறது.

பிறருக்கு நலனைச் செய்வதும் இன்பத்தை விளைவிப்பதுமாகிய சொற்களையே அன்புடன் பேசவேண்டும். சத்தியத்தையே பேசவேண்டும். இது வாக்குமயமான தவமாகின்றது.

மன மகிழ்ச்சியுடனும் அன்புடனும் இருக்க வேண்டும். ஈஸ்வரச் சிந்தனையிலேயே மனதை ஈடுபடுத்த முயலவேண்டும். எப்பொருளிடத்தும் தெய்விக இணக்கம் வைக்கவேண்டும். இது மனோ மயமான தவமாகிறது. இங்ஙனம் முக்கரணங்களையும் திருத்தி அமைப்பவன் தனக்குரிய தவத்தை முறையாகச் செய்தவன் ஆகின்ளூன். இதனை வள்ளுவர்,

'தவம் செய்வார் தம் கருமம் செய்வார்' என்று குறிப்பிடுகின்ளூர். தவத்தின் மூலமே எல்லாச் சிறப்புக்களும் வந்தமைகின்றன. பாண்டவர்கள் தவத்தின் மூலமாகத் தங்களை உறுதிப்படுத்தினர்கள். கௌரவர்கள் சேனுபலத்தைப் பெருக்கினர்கள். தவத்தின் மூலம் தங்களை உறுதிப்படுத்திய பாண்டவர்களே வெற்றி அடைந்தார்கள். வசிஷ்டருடைய தவத்தின் மகிமை எத்தகையது என்பதனை விசுவாமித்திரர் கண்டு வியப்படைந்தார். விசுவாமித்திரர் தவம் செய்து தம்மைப் பிரம்மரிஷி ஆக்கிக் கொண்டார். தவத்தின் மகிமை அத்தகையது.

'நேர்மை கடைப்பிடி' என்பது கோட்பாடு. சிந்தை, சொல், செயல் ஆகிய மூன்றிலும் கோணலில்லாத் தன்மை ஆர்ஜவம் அல்லது நேர்மை ஆகிறது. சிந்தை, சொல், செயல் ஆகிய மூன்றும் ஒன்றுபடும்போது ஆர்ஜவம் அல்லது நேர்மை கடைப்பிடிக்கப்படுகிறது. நேர்மை உடையவன் எல்லாராலும் நேசிக்கப் படுகின்ளூன். அவனுக்குப்பகைவர் எவருமில்லை.

அழுக்காறு அல்லது பொருமை மனிதனுடைய உள்ளத்தை அறவே கெடுத்துவிடுகிறது. பிறருடைய வளர்ச்சியைக் கண்டு மகிழ்ச்சி அடைபவன் அஹிம்சா மூர்த்தியாகின்ளூன். பிறருடைய முன்னேற்றத்தைக் கண்டு மனம் பொருதவன் கீழ்மையடைகின்ளூன். உயிர்களைத் தனக்கும் இறைவனுக்கும் புறம்பாக நினைக்கும்போது உயிர்கட்குத் தீங்குசெய்யும் எண்ணம் வந்துவிடுகிறது.

எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே

என்பது தாயுமானவர் வாக்கு. எல்லா உயிர்களிடத்தும் அன்பு பாராட்டி அவைகட்குத் தொண்டு செய்ய வேண்டும்.

இறைவன் ஒருவன்தான் மெய்ப்பொருள் என்ற உண்மைக்கு ஒப்ப உணர்வதும் உரைப்பதும் சத்தியமாகும். 'சத்தியம் வத' என்பது கோட்பாடு. சத்தியமே தெய்வம் ஆகி

றது. சத்தியம் பேசுகின்ற மனிதன் விரைவில் திருந்தி அமைகின்றான். சத்தியத்திற்கு நிக ரான தவம் இல்லை. ஹரிச்சந்திரனுக்கு எவ் வளவோ நெருக்கடி வந்தும் சத்தியத்தை விடாது கைப்பற்றினான். தந்தையைச் சத்திய வானாக்குவதற்காக இராமன் பதினான்கு ஆண்டு கள் வனவாசம் போனான். நசிகேதன் தன் தந்தையின் வாக்கைச் சத்தியவாக்காக்குவதற் காக எமலோகம் சென்றான். இங்ஙனம் சத்தி யத்தை வாழ்க்கையில் கடைப்பிடித்துப் பெரு நிலை அடைந்தவர்கள் நமக்கு வழிகாட்டிகளாக இருக்கிறார்கள்.

கோபம் மிகவும் பொல்லாதது. காமமே கோபமாக மாறுகிறது. காமத்தை வெல்லு கின்ற அளவு கோபத்தையும் வெல்லலாம். கோபத்தைக் கடவுள்பால் திருப்புவதும் கோபத்தை வெல்லுதற்கு உபாயமாகும். நம்மீது நாம் கோபித்துக் கொள்வதில்லை. உயிர்களனைத்தையும் நம் சொருபமாகக் காணு மிடத்துக் கோபத்திற்கிடமில்லை.

நாம் இவ் உலகத்திற்குத் தனியாக வந் தோம். இதை விட்டுப் போகும்பொழுது தனி யாகத்தான் போவோம். இவ் உலகத்தில் வாழ்ந்திருக்கும் பொழுதும் நமக்குரியதென்று எதையும் உரிமை பாராட்டலாகாது. இவ் உலகில் உள்ள யாவும் பரமனுக்குரியவை என்று அவைகளிடத்து உரிமை பாராட்டா திருப்பது தியாகம் ஆகும்.

மனம் புற உலகில் செல்கின்றவளவு அசாந்தி உண்டாகிறது. பௌதிக விஞ்ஞானத் தின்மூலம் இயற்கையைப் பற்றிய பல ரகசியங் களை அறிந்து இயற்கையை வாழ்விற்குப் பயன் படுத்துகின்ற முறையை அறிந்திருக்கின்றோம். அதன் மூலம் வாழ்வில் பல சௌகரியங்களைப் பெற்றிருக்கின்றோம். ஆனால் மனதில் சாந் திக்கு வழியில்லை. மன நிறைவேற்பட்டால் தான் மனச்சாந்தி உண்டாகும். நிறைபொரு ளாகிய தெய்வத்தைச் சார்ந்திருந்து பழகு கின்றவளவு மன நிறைவு உண்டாகிறது. அப் போது மனதிற்கு அமைதியும் கிட்டுகிறது.

நல்லவர்கள் பிறரிடமுள்ள நல்லதையே காண்கின்றார்கள். பிறரிடம் குறை காணாத இயல்பு தமக்கு வேண்டுமென்று ஸ்ரீ சாரதா தேவியார் பிரார்த்தனை செய்து கொண்டார் கள். பிறருடைய சிறப்பைப் பற்றியே பேசும் போது அது அபைசுனம் ஆகிறது. பிறரு டைய சிறப்பையே பேசும்போது நாமும் நல மடைகின்றோம்; பிறரும் நலமடைகின்றார்கள்.

மன்னுயிரைத் தன்னுயிர் போல நேசிக்க வேண்டும். பிற உயிர்கட்கு உண்டாகும் துன் பத்தைத் தனக்கே வந்த துன்பம் போன்று உணர்பவன் உயர்ந்த மனிதனாகின்றான். வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் தம் உள்ளம் வாடியது என்று வள்ளலார் பகர் கின்றார். பிற உயிர்களிடத்து இரக்கம் காட்டுபவர்களே வள்ளல் ஆகின்றார்கள். ஏழை களுக்காக யாருடைய உள்ளம் ரத்தம் சிந்து கிறதோ அவரே மகாத்மா ஆகின்றார். எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தி உயிர் களுக்கு வந்த துன்பத்தைத் துடைப்பவர்கள் இளகிய மனம் படைத்தவர்களாகின்றார்கள்.

இந்திரிய சுகத்தை வென்று பழகினவர்கள் யாருடைய பொருளையும் விரும்புவதில்லை. தங்களிடத்தில் உள்ளதைக் கொண்டே பூரண திருப்தி உடையவர்களாக இருக்கின்றார்கள். இனிமையும் மிருதுத் தன்மையும் உடையவர் கள் பண்பட்டவர்கள் ஆகின்றார்கள்.

பிறர் தங்களைப் புகழ்கின்றபொழுது நல்லார் கள் நாணமடைகின்றார்கள். தகாத செயலில் ஈடுபடவும் அவர்கள் நாணுகின்றனர். எக் காரணத்தைக்கொண்டும் மனம்சலியாதவர்கள் மனத்திட்பம் உடையவர்களாகின்றார்கள். கய வர்கட்கு இடையில் அஞ்சாத மனம் படைத் திருப்பது தைரியம் ஆகிறது. பிறர் செய்த தீங்கை மறந்து விடுவது பொறை ஆகிறது. உடலும் இந்திரியங்களும் சோர்வடையாதிருக் கும்படி பார்த்துக்கொள்ளும் மனநிலை மன உறுதி ஆகிறது. மனதில் கீழான எண்ணம் வாராதிருப்பது மனத்தூய்மை ஆகிறது. பிறர்க்குத் தீங்கு செய்யவேண்டும் என்ற எண் ணம் உண்டாகாமல் இருப்பது வஞ்சக மின்மை ஆகிறது. பிறர் தன்னை மதிக்க வேண்டும் என்று எண்ணுவது செருக்கு. பிற ருடைய பாராட்டுதல்களுக்கோ, பிறர் தன்னைப் புகழும் பேச்சுக்கோ செவி கொடாதிருப்பது அகங்காரத்தைத் தேய்க்கிறது. மேற்கூறிய தெய்வீக இயல்புகள் மனத்தகத்து ஓங்கும்படி வாழ்ந்து வருவோமாக. (முற்றும்)

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M.A.)

" யார் யார் எந்தெந்த வடிவமாக அக்கறையுடன் என்னை வழிபட விரும்புகிறார்களோ, அவரவர்க்கு, அவரவருடைய சோர்வில்லாத அக்கறைக்கு அந்தந்த வடிவமாக நானேதோன்றிக் காட்சி தருகிறேன் " என்கிறார் பகவான் கிருஷ்ணன்.

**சிவன்**

தமிழர்கள் ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வத்தை வரையறை செய்துள்ளனர். ஆனால், எந்த நிலத்திற்காவது சிவனைத் தெய்வமாக வரையறை செய்திருக்கின்றார்களா? இல்லை.

சிவ வழிபாடு பழங்காலத்தில் தமிழ்நாட்டில் அவ்வளவு பரவலாக இல்லை என்று ஒரு சாரார் கூறுகின்றனர். சிவ வழிபாடுதான் தொடக்க காலத்தில் தமிழ் நாட்டில் இருந்து வந்தது என்று மற்றொரு சாராரும் கூறுகின்றனர்.

சிவனை ஒரு நிலத்தின் தெய்வமாகத் தமிழ் நூல்கள் சொல்லவில்லை; சிவனைப்பற்றிய செய்திகள், சங்க இலக்கிய நூல்களில் மிகவும் குறைவாகவே வருகின்றன; ஆகவே, சிவனுக்குப் பிரதானம் கொடுக்கும் சிவ வழிபாடு பழந்தமிழரிடையே இல்லை என்பது முதலில் சொன்ன ஒரு சாரார் கருத்து.

மொகஞ்சதரோ – ஹரப்பா நாகரிகம் திராவிடர் நாகரிகம். அச்சிந்துவெளி நாகரிகத்தில் சிவலிங்கம் கண்டெடுக்கப்பட்டுள்ளது. சிவலிங்க வழிபாடு உலகம் முழுவதும் பரவியிருந்தது. எனவே, திராவிடர்கள் என வரலாற்று ஆசிரியர்கள் குறிக்கும் தமிழர்களிடத்தில், தொன்மையான காலத்தில் இருந்தே சிவ வழிபாடு இருந்தது என்பது இரண்டாவது சொன்ன மற்றொரு சாராரின் கருத்து.

**சங்க இலக்கியங்களில் சிவபெருமான்**

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனை நக்கீரனார் பாராட்டும்போது, அம் மன்னன் சிவபெருமான், பலராமன், திருமால், முருகவேள் ஆகிய தெய்வங்களின் ஆற்றலை ஒவ்வொரு விதத்தில் கொண்டிருக்கின்றான் எனப் பாடுகின்றார். [ புறநானூறு : 56 ]

" நீலமணி மிடற்று ஒருவன் " [புறநானூறு: 91. ]

நீல நிறம் பொருந்திய அழகிய கழுத்தினை உடைய ஒப்பற்றவன் என்று சொல்லப்படுகிறான் சிவபெருமான்.

" நீள் நிமிர் சடை முது முதல்வன்
வாய் போகாது ஒன்று புரிந்த
ஈர் இரண்டின் ஆறு உணர்ந்த
ஒரு முதுநால் "—[புறநானூறு : 166.]

—"நீண்ட சடையை உடைய, முதிய இறைவனது [சிவபெருமானது] வாக்கை விட்டு நீங்காமல், அறம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு சிறப்புடையவற்றை வலியுறுத்திக் கூறும் வேதநூல்" என்று சிவபெருமானைப் பற்றிய குறிப்பு வருகிறது. " முக்கண் செல்வர்" (புறநானூறு : 6) மூன்று கண்களை உடையவர்; " பிறைநுதல் விளங்கும் ஒரு கண் " (புறநானூறு : 55)— நெற்றிக்கண்ணை உடையவன் – என்றெல்லாம் சிவபெருமான் குறிப்பிடப்படுகின்றார்.

சங்க நூல் தொகைகளுள் ஒன்றான, பத்துப்பாட்டுத் தொகுதியுள் சிவபெருமானைப் பற்றிய குறிப்புக்கள் நான்கு இடங்களில் மட்டுமே வந்துள்ளன. அந்த நான்கு இடங்களிலும் சிவன் என்ற பெயர் வரவில்லை.

"நீரும் நிலனும் தீயும் வளியும்
ஆக விசும்போடு ஐந்துஉடன் இயற்றிய
மழுவாள் நெடியோன்..."

—நீர், நிலம், தீ, காற்று, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்களைப் படைத்தவன்; மழு என்னும் ஆயுதத்தை உடையவன் என்று மதுரைக் காஞ்சி (453-455) கூறுகிறது. இவ்வடிகளில் சிவபெருமான் இயல்புகள் குறிப்பிடப்படுகின்றன.

" பேரிசை நவிரமேஎ உறையும்
காரி உண்டிக் கடவுள் "

— பெரும் புகழ் வாய்ந்த நவிரம் என்ற இடத்தில் வீற்றிருப்பவன்; நஞ்சை உணவாக உடையவன் என மலைபடுகடாம் [ 82-83 ] என்ற நூல் சிவனைப்பற்றிக் கூறுகிறது.

பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான திருமுருகாற்றுப் படையில்,

"...................வெள்ளேறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமை அமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூ எயில் முருக்கிய முரண்மிகு செல்வன்"

— வெற்றிதரும் போர்க்களத்தில் அவன் உயர்ந்த இடபக்(ரிஷபம்) கொடியை ஏந்தியுள்ளான். அவன் ஒரு பாகத்தில் உமையம்மை வீற்றிருக்கின்ருள்; அனைவரும் புகழும் திரண்ட தோள்களை உடையவன்; இமைத்தல் இல்லாத மூன்று கண்களை உடையவன்; முப்புரங்களை அழித்தவன்" எனச் சிவபெருமான் கூறப்படுகின்ருன். "ஆல் கெழு கடவுள்"— கல் ஆல மரத்தின் அடியில் வீற்றிருக்கின்ருன் எனவும் திருமுருகாற்றுப்படை சிவனைப் பற்றிக் கூறுகிறது.

கடவுளுக்கு உருவம் இல்லை; எல்லா உருவங்களாகவும் இறைவன் விளங்குகிருன் என்பது உண்மையே. கடவுளுக்கு இனம், மொழி முதலிய வேறுபாடுகள் இல்லை; எல்லாருக்கும் பொதுவானவன் இறைவன். இந்தக் கடவுள், அந்தக் கடவுள் என வேற்றுமை காட்டவேண்டாம் எனச் சொல்லுவதும் உண்மைதான்.

இருந்தாலும், ஒவ்வோர் இனத்தாரும் தங்கள் சிந்தனைக்குத் தோன்றியவாறு கடவுள் தத்துவ முறைகளை வகுத்துக்கொண்டனர்; வழிபாட்டு முறைகளையும் அமைத்துக்கொண்டனர். அம்முறையில் தமிழர் அமைத்துக்கொண்ட கடவுள் வழிபாட்டு முறைகள் எவ்வாறு அமைந்துள்ளன என்பதையும், சங்க இலக்கியங்களில் கடவுளைப் பற்றியும் சமயங்களைப் பற்றியும் சொல்லப்பட்ட கருத்துக்கள் யாவை என்பதைப் பற்றியும் இக்கட்டுரைத் தொடரில் நாம் பார்த்து வருகின்றோம்.

தொல்காப்பியர் காலத்தில் மக்களிடம் தெய்வ நம்பிக்கை இருந்து வந்தது என்பதை அவருடைய நூற்பாக்களால் அறியலாம். தாங்கள் வழிபட்டு வந்த கடவுளுக்கு அவர்கள் தாங்கள் விரும்பியவாறு பல வடிவங்களைக் கற்பித்துக் கொண்டனர். அத்திருவுருவங்களின் முன்னல் நின்றுகொண்டு போற்றி வழிபாடு செய்தனர்.

அவ்வாறு வழிபாடு செய்யும்போது, தெய்வத் திரு உருவத்தின் முன்னல் "சூளுறவு" [சபதம்] செய்து கொண்டனர். இன்ன நல்வழியில் நடப்பேன்; இன்னவற்றைச் செய்வேன்; அவ்வாறு செய்யாது போனல், இத்தகைய தண்டனை எனக்குக் கிடைக்கட்டும் என்று உறுதி மொழி எடுத்துக்கொண்டனர். அவ்வாறு தாம் எடுத்துக்கொண்ட உறுதி மொழிகளில் இருந்து தவறுவார்களேயானல், அந்தச் "சூள் உறவே" அவர்களுக்குத் துன்பம் உண்டாக்கும் எனவும் நம்பினர்.

"முன்தேற்று" என்னும் பெயரால் அமைந்த தொல்காப்பியச் சூத்திரத்தாலும் [தொல், சொல், உரியியல்–சூத் 85.], "இன்னத் தொல் சூள்" என்னும் தொல்காப்பிய நூற்பாத் தொடராலும் இச்செய்திகளை அறியலாம்.

முருகன், திருமால், இந்திரன், வருணன் என்ற தெய்வங்களே தொல்காப்பிய நூலில் சொல்லப்படுகின்றன. சிவன் முழு முதல் கடவுள் ஆயிற்றே. அக்கடவுளைப் பற்றித் தொல்காப்பிய நூலில் சொல்லப்படவில்லையா என்று கேட்கலாம். சிவனைப் பற்றித் தொல்காப்பியத்தில் சொல்லப்படவில்லை. மிகப் பழைய திராவிட நாகரிகம் என்று சொல்லப்படும் மொகஞ்சதரோ–ஹரப்பா சிந்துவெளி நாகரிகத்தில் சிவ வழிபாடு–சிவன் வாகனம் எருது ஆகியவை பற்றிப் பேசப்படுகின்றன. சிந்துவெளி முத்திரைகளில் "எனன்" என்ற ஒரு சொல் காணப்படுகிறது. இச்சொல் "எண்குணத்தான்" ஆகிய சிவபெருமானைக் குறிப்பது என ஹீராஸ் பாதிரியார் குறிக்கின்ருர். அங்கே கிடைத்த பல முத்திரைகளில் சிவன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. ஆனல் பழம்பெரும் நூலான தொல்காப்பியத்தில் சிவனுக்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லை. சிவனைப் பற்றிப் பேசவும் இல்லை.

கன்னியாகுமரிக்குத் தெற்கே பஃறுளியாறு என்னும் ஆறு ஓடியது. இந்த ஆற்றின் கரையில் பாண்டிய மன்னர்களின் தலைநகரம் மதுரை இருந்தது. இந்நகரில் முதல் தமிழ்ச் சங்கம் இருந்தது. இதில் 549 புலவர்கள் உறுப்பினர்களாக இருந்தார்கள். இச்சங்கத்தின் தலைவராகத் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் ஆகிய சிவபெருமான் வீற்றிருந்தார். இச்செய்தி இறையனர் அகப்பொருள் நூல் உரையில் காணப்படுகிறது.

கன்னியாகுமரிக்குத் தெற்கே ஒரு காலத்தில், இந்துமகா சமுத்திரம் பெரிய நிலப்பரப்பாக இருந்தது. இந்த நிலப்பரப்பிற்கு இலெமூரியாக் கண்டம் அல்லது குமரிக் கண்டம் என்று பெயர். இக்கண்டத்தில் வாழ்ந்து வந்த மக்கள் வழிபட்ட முழுமுதற் கடவுள் சிவபெருமான்.

ஆரிய வர்த்தம் எனப்படும் விந்திய மலைக்குத் தெற்கே வாழ்ந்தவர்கள் சிவனை முழுமுதல் கடவுளாக எண்ணி வழிபட்டு வந்தனர். ரிக்வேதத்தில் சிவன், "தட்சிணாபதி" அதாவது சிவன் தென்னாட்டு மக்களால் வழிபட்டுவரக் கூடிய தெய்வம் எனச் சொல்லப்படுகிறது. சிவனை வணங்கி வந்த சைவ நெறி, தாய்வழிபாடாகிய கொற்றவை [காளி] வழிபாடு ஆகிய இரண்டும் குமரிக் கண்டத்தில் நடைமுறையில் இருந்து வந்த வழிபாட்டு முறைகள் ஆகும்.

இவ்வாறு குமரிக்கண்டத்தில் சிவனுக்கு முதலிடம் கொடுத்து வழிபட்டுவந்த சிவவழிபாட்டு முறையோ சிவனைப் பற்றியோ தொல்காப்பியத்தில் சொல்லப்பட வில்லையே என்ன காரணம்?

தொல்காப்பியர் தாம் நூல் எழுதிய காலத்திற்கு முன்னால் இருந்த தமிழ் மக்களின் வாழ்க்கை முறைகளைத் தெள்ளத் தெளிவாக ஆராய்ந்து அறிந்து நூல் எழுதினர் என்பது உண்மையே. இருந்தாலும் சிவனுக்கு முக்கியத்துவம் கொடுத்து வந்த முதற்சங்க காலத்திற்கும் தொல்காப்பியர் காலத்திற்கும் நீண்ட இடைவெளி இருந்தது. கடல்கோள் ஏற்பட்டு முதற் சங்ககால மக்கள், அவர்களுடைய பழக்க வழக்க முறைகள் தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு கிடைத்திருக்கக் கூடும். எனவே, தொல்காப்பியர் தமது தொல்காப்பியத்தில் சிவனைப் பற்றிச் சொல்லவில்லை. இலக்கியம் கண்டதற்கு இலக்கணம், தம் காலத்தில் கண்ட மரபுகளுக்கு இலக்கணம் கூறினர்.

"தமிழ் மக்களின் மிகத் தொன்மையான அரசியல்,சமுதாய அமைப்பு,நாகரிகச்செம்மை, ஒழுங்கான வாழ்க்கை அமைப்பு ஆகியவை வரலாற்று ஆசிரியர்களின் வரையறைக்கு அப்பாற்பட்டவை; மிகவும் தொன்மையான காலத்திலேயே தோன்றியவை" என வரலாற்று ஆசிரியர் ஒருவர் (**T. R. Seshe Iyengar—Dravidian India - Page-195**) கூறுவதை, தொல்காப்பியர் சிவனைப்பற்றிச் சொல்லாததற்கு ஒரு சமாதானமாக வைத்துக்கொள்ளலாம்.

தொல்காப்பியர் காலத்திலும், சங்க இலக்கியங்களிலும் முருகனைப்பற்றியே பெரிதும் பேசப்படுகிறது. முருகன், திருமால், இந்திரன், வருணன் முதலிய தெய்வங்களைத் தவிர வேறு தெய்வங்களைப் பற்றித் தொல்காப்பியத்தில் சொல்லவில்லை.

சமயம் என்ற மதத்தைக்குறிக்கும் சொல்லும் தொல்காப்பியத்தில் இல்லை. கடைச் சங்க இலக்கிய நூல்களிலும் சமயம் என்ற சொல் வழங்கப்படவில்லை.

மணிமேகலை என்ற காவிய நூலிலும், திருமூலர் எழுதிய திருமந்திரத்திலும், பிற்காலத்திய சமய இலக்கிய நூல்களிலும் சமயம் என்ற சொல் முதன் முதலாகக் காணப்படுகிறது. சங்ககாலத்துக்குப் பிறகு, பிற்காலத்தில் தமிழ்நாட்டில் மந்திரம், யாகம் போன்றவை சிறந்து விளங்கின. "வெறியாட்டு" என்ற வழிபாட்டு முறைஇருந்து வந்தது. இவ்வெறியாட்டு முருகப்பெருமானுக்கு முதலிடம் கொடுத்து நடத்தப்பட்டு வந்தது என்பதைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

சங்க காலத்தில் முருக வழிபாடு அமைந்திருந்த முறையை முதலில் காண்போம்.

**முருகன்**

மலையும், மலையைச் சார்ந்துள்ள இடமும் குறிஞ்சி நிலம். இந்த நிலத்துக்கு உரிய முக்கிய தெய்வமாக முருகனை வழிபட்டுவந்தார்கள். தமிழ் மக்களின் உள்ளத்தை மிகவும் கொள்ளைகொண்டவன் முருகன். முருகனைச் "சேயோன்" எனத் தொல்காப்பியர் கூறுகிறார்.

இயற்கையே கடவுள் வடிவம் என்பதை நன்றாக அறிந்தவர்கள் தமிழர்கள். இயற்கையழகு கண்ணுக்கு மகிழ்ச்சியாக இருந்தது; மனதிற்கும் மகிழ்ச்சி ஊட்டியது. இதை அவர்கள் தங்களின் அனுபவத்தில் உணர்ந்திருந்தார்கள். பசுமை படர்ந்த மலைகளும், மரம் செடிகொடிகளின் அடர்த்தியும், பல வண்ண மலர்களும், நீலநிறக் கடலும் நம் முன்னோர்

களின் கண்களுக்கு நல்ல விருந்தாக அமைந் திருந்தன.

இயற்கை இயற்கைதானே என்று அவர் கள் எளிமையாக எண்ணிவிடவில்லை. இந்த இயற்கை அழகுக்குப் பின்னால், ஏதோ ஓர் அளவிட முடியாத ஆற்றல் உள்ளது என்பதை உறுதியாக நம்பினர். அந்த அளவிட முடி யாத ஆற்றலுக்கு ஒரு வடிவம் கொடுத்தனர்.

இறைவனுக்கு உருவம் கிடையாது என்பது உண்மையே. உருவம் அற்ற பரம்பொருளாக இறைவனை நினைத்து வழிபாடு செய்தல் ஒரு வழிபாட்டுநிலை. ஆனால் இந்த வழிபாட்டு நிலை எல்லாருக்கும் கைகூடாது. பெருஞானம் வரப்பெற்றவர்களுக்கே கைகூடும். சாதாரண நிலையிலே உள்ளவர்களும் இறைவனை நினைத்து வழிபடுவதற்கு வசதியாக நம் முன் னோர்கள் இயற்கை ஆற்றலுக்கு ஒரு வடிவம் கொடுத்தனர். அவ்வடிவத்தை "முருகு" என் னும் பெயரால் அழைத்தனர்.

சங்க இலக்கியங்களில் பல இடங்களில் "முருகு" என்னும் சொல் வருகிறது. முருகு என்றால் அழகு. இப் பண்புச் சொல் முரு கனைக் குறிப்பதற்கு வழங்கப்படுகிறது. சங்க இலக்கியங்களில் ஒன்று மதுரைக் காஞ்சி. இந்நூலுக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர், "முருகு என்பதன் பொருள் தெய்வத் தன்மை கொண்டது; அது முருகக் கடவுளுக்கு ஆகு பெயராக அமைந்தது எனக் கருதுகிறார்."

[மதுரைக் காஞ்சி 181-அடி]

பசுமையான மலைகளைக் கண்டு மகிழ்ந்த சமயத்தில் முருகனுக்கு அங்கே கோயில் அமைத்தார்கள். மரம் செடி கொடி அடர்ந்த சோலைகளில் முருகனை எழுந்தருளப் பண்ணி னார்கள். கடற்கரை அருகில் — அலைவாயின் அருகில் — முருகனுக்கு ஆலயம் அமைத்தனர்.

நாளடைவில் இவ்விடங்களில் எல்லாம் பெரும் ஆலயங்கள் தோன்றலாயின.

**சங்க இலக்கியங்களில் முருகன்**

"அணங்குடை முருகன் கோட்டத்து" [புறநானூறு 299] –தீண்டி வருத்தும் முருகன் கோயில் என முருகன் கோயில் ஒன்று சொல் லப்படுகிறது. முருகன் தீயவர்களைத் தீண்டி வருத்தித் துன்பம் செய்வான் என்பது தெரி கிறது.

"திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎயொடு"– [அகநானூறு-266]

—அழகிய மணிவிளக்கு ஒளிவிட்டுப் பிரகாசிக் கும் திருச்சீரலைவாயில் முருகன் கோயில் கொண்டுள்ளான் என்கிறது அகநானூறு என் னும் சங்க இலக்கியம்.

அவ்வளவு பழங்காலத்திலேயே அலைவாய் என்ற திருச்செந்தூர் முருகன் குடிகொண்ட தலமாகச் சிறந்து விளங்கியிருக்கிறது.

"வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்
நெடுவேள்" — [புறநானூறு-55]

வெள்ளை அலைகளைக் கரையில் மோதுகின்ற திருச்செந்தில் அம்பதியில் எழுந்தருளியிருக் கும் நெடுவேளாகிய முருகவேள் எனப் புற நானூறு கூறுகிறது. இங்குத் திருச்செந்தில் என்ற ஊர்ப் பெயர் அமைந்திருத்தலை அறிய லாம்.

**முருகன் எத்தகையவன்?**

முருகன் வெற்றித் தெய்வம். போர் இடு வதில் வல்லவன். "வெல்போர்ச் சேஎய்"— போரில் வெற்றி பெறும் முருகன் என மலைபடு கடாம் [அடி-493] நூல் கூறுகிறது. "செரு வெஞ்சேஎய்" "செருமிகுசேஎய்"— போரில் வல்ல முருகன் எனப் புறநானூறு [14, 120] கூறுகிறது. "செருமிகு சேஎய்" என அகநா னூறும் [266] கூறும்.

"முருகு உடன்று கறுத்த" [பதிற்றுப்பத்து 26] "முருகு உறழப் பகை" [மதுரைக் காஞ்சி-181] "முருகன் சீற்றத்து உருகெழு குரிசில்" [பொருநர் ஆற்றுப்படை-131]— போர்க்களத்திற்குப் படை எடுத்துச் செல்லும் அரசன் ஒருவனின் கோபம் முருகன் கோபம் கொள்வதைப் போல இருக்கிறது என இச் சங்க இலக்கியப் பகுதிகள் தெரிவிக்கின்றன.

சங்க இலக்கியத் தொகுதிகளுள் ஒன்று பத்துப் பாட்டுத் தொகுதி. பத்துப்பாட்டுத் தொகுதியில் முதலாவதாக இருக்கும் நூல் திருமுருகாற்றுப்படை. முருகன் அருளைப் பெறுவதற்காக ஒருவன் பெருவிருப்பத்துடன், அம் முருகனை எப்படி அடையலாம் என்ற அருள் நாட்டத்துடன் வருவான். அப்போது ஏற்கனவே முருகன் திருவருளைப் பெற்ற ஒரு வன் தனக்கு எதிரே முருகன் திருவருளைப் பெற விரும்பி வருகின்றவனிடத்தில் முருகனு

டைய இடம், குண நலன்கள், அவனைத் தான் வழிபட்டுப் பெற்றுவந்த பெரும் பேறு ஆகிய வற்றை எடுத்துக் கூறி, இதேபோல, நீயும் அந்த முருகனிடத்திலே சென்றால் இவற்றை யெல்லாம் நான் பெற்றது போலவே நீயும் பெறலாம் என்று சொல்லி அவனுக்கு வழி சொல்லி, அவ்வழியிலே செல்லுமாறு நெறிப் படுத்துவான்.

இம் முறையிலே அமைந்தது திருமுருகாற் றுப்படை என்னும் நூல். சங்ககாலத்தில் முருகனைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்ட நூல் இது. இந்நூலைப் பாடியவர் நக்கீரர். இது சங்ககால நூல் அன்று. இந்த நூலின் நடை, மொழி அமைப்புக்கள் சங்க இலக்கியங் களில் காணப்படுகின்ற நடைமொழி அமைப் புக்கள் போன்றவை அல்ல; வேறுபட்டவை. நக்கீரர் என்ற புலவர்கள் பலர் இருந்தனர். சங்ககால நக்கீரர் இல்லாமல், வேறு ஒரு நக்கீரர் திருமுருகாற்றுப்படை நூலைப் பாடி னார் எனவும் ஒரு கருத்துக் கூறுவார்கள்.

முருக பக்தியிலே திளைத்திருப்பவர்கள் நல்ல இலக்கியப் புலமையும் பெற்றிருப்பார் களானால், அவர்கள் நாள்தோறும் திருமுரு காற்றுப்படை பாராயணம் செய்வதுண்டு. வேறு முருக பக்தர்கள் சிலர், குமரகுருபரர் பாடிய பிற்காலத்து நூலான "கந்தர் கலி வெண்பா"வைப் பாராயணம் செய்வார்கள். இன்னும் சிலர், தேவராய சுவாமிகள் பாடிய "கந்தர் சஷ்டிக்கவசத்தைப்" பாராயணம் செய்வதுண்டு. இப்படி முருக பக்தர்களால் பாராயணம் செய்யப்படும் திருமுருகாற்றுப் படை நூலில் முருகன் எவ்வாறு சொல்லப்படு கிறான் ?

திருமுருகாற்றுப் படையில், "மறுவில் கற் பில் வாள்நுதல் கணவன்"—குற்றம் இல்லாத கற்பில் சிறந்த அழகிய நெற்றியை உடைய தெய்வயானையின் கணவன். "அறுவர் பயந்த ஆலமர் செல்வன்"— பகீரதி என்ற கங்கை யாறு கொணர்ந்து சேர்க்க ஆறு தீப்பொறி களும் சரவணப்பொய்கையில் சேர, கார்த்தி கைப் பெண்கள் ஆறுபேரும் எடுத்து வளர்த் தனர்; அத்தகைய செல்வன். "ஆல்கெழு கடவுள் புதல்வன்"—கல் ஆலமரத்தின் கீழே வீற்றிருக்கும் சிவபெருமானின் புதல்வன். "கொற்றவை சிறுவன்"— காளியின் மகன். "இழையணி சிறப்பின் பழையோள் குழவி"— நல்ல ஆபரணங்களை அணிந்த பழையோள் ஆகிய உமையம்மையின் குழந்தை. "வானோர் தானைத்தலைவன்" தேவர்களுக்கெல்லாம் சேனா திபதியாகத் திகழுகிறான். "குறிஞ்சிக் கிழவன்" குறிஞ்சி நிலத்திற்கு உரிமை உடைய வன் என்றெல்லாம் முருகப் பெருமான் திருமுரு காற்றுப்படையில் பாராட்டப்படுகிறான்.

குறிஞ்சிக் கிழவன்—மலைப்பகுதிக்கு உரிமை உடையவன் என்பது நிலத்தின் உரிமை பற்றி வந்த பெயராயிற்று. தெய்வயானையின் கண வன், கார்த்திகைப் பெண்கள் அறுவரால் சரவணப் பொய்கையில் இருந்து எடுத்து வளர்க்கப் பெற்றவன், கல் ஆல மரத்தின் கீழ் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானின் புதல் வன், கொற்றவை என்ற காளியின் மகன், தேவ சேனாபதி என்றெல்லாம் முருகன் அழைக்கப் பெறுகிறான்.

இவற்றில் புராணக் கதைகள் சொல்லப்படு கின்றன. சங்க இலக்கியங்களில் சில இடங் களில் புராணங்கள் சம்பந்தப்பட்ட செய்திகள் சொல்லப்படுகின்றன. திருமுருகாற்றுப்படை முழுக்க முழுக்க முருகனைப் போற்றிப் புக ழும் நூல். கடவுள் சம்பந்தப்பட்ட நூல். முருகனோடு தொடர்பு கொண்ட புராணக் கதைகளின் செய்திகள் தமது நூலுக்கு நிறைவு செய்வன எனக் கருதி நக்கீரர் புராணச்செய்தி களைத் தமது திருமுருகாற்றுப்படையில் சேர்த் திருக்கலாம். அன்றியும் அக்காலத்திலேயே, புராணச்செய்திகள், கதைகள் தமிழ் நாட்டில் பரவத் துவங்கியதும் ஒரு காரணமாக இருக்கலாம்.

திருமுருகாற்றுப்படையில் திருச்செந்தூர், பழமுதிர்சோலை, திருப்பரங்குன்றம், திருஆவி னன்குடி, திருஏரகம், குன்றுதோறாடல் ஆகிய ஆறுபடைவீடுகளை முருகன் சிறப்புத்தலங் களாக ஏற்றுக்கொண்டு வீற்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

முருகன் வீற்றிருக்கும் ஆறுபடை வீடுகளும் சரீரத்தின்கண் அமைந்துள்ள ஆறு ஆதாரங் களைக் குறிக்கின்றன என்று அதற்குத் தத்துவ விளக்கம் கூறலாம். ஏழாவது ஆதாரம் பரத் தோடு ஒன்றுபட்ட நிலையாகும்.

# மலைநாட்டுப் புனித ஸ்தலயாத்திரை

( சுவாமி குஹானந்தர் )

[ 440ஆம் பக்கத் தொடர்ச்சி ]

*10—9—78* ஞாயிறு அன்று திருவனந்தபுரத்தில் நெட்டயம் என்ற இடத்திலுள்ள ராம கிருஷ்ண மடத்திற்குச் சென்றோம். அதன் தலைவர் எங்களை அன்புடன் வரவேற்றார். அந்த ஆஸ்ரமம் 1924ஆம் ஆண்டில் கட்டி முடிக்கப் பெற்றது. ரம்யமான சூழ்நிலையில் உயர்ந்த குன்று ஒன்றின்மேல் அவ் ஆஸ்ரமம் இருக்கிறது. அங்கே இரு பக்தர்கள் இனிய குரலில் பஜனை செய்ய அதைக்கேட்டு இன்புற்று, தியானம்முடித்துக்கொண்டு வர்க்கலை என்ற க்ஷேத்திரத்திற்குக் காலை 10 மணிக்குச் சென்றோம்.

வர்க்கலை மேற்குக் கடற்கரையில் திருவனந்தபுரத்திலிருந்து சுமார் 25 மைல்களுக்கப்பால் இருக்கும் பிரசித்திபெற்ற விஷ்ணு ஆலயமாகும். உயர்ந்த குன்றில் விசாலமான பிரகாரங்களுடன் அமைந்திருக்கிறது. அங்குள்ள மூர்த்தி ஸ்ரீ ஜனார்த்தனன் என்று வழங்கப்படுகிறது. அங்குத் தரிசனமும் பிரகாரத்தில் கூட்டுப் பிரார்த்தனையும் முடித்துக் கொண்டு, கடற்கரை அருகில் அரை கிலோ மீட்டர் தூரத்திலிருக்கின்ற சிறிய அருவிக்குச் சென்றுவந்தோம். அது பூமிக்கடியிலிருந்து வருகின்ற ஊற்று ஆதலால், உடலுக்கு நன்மை பயக்கவல்லது. அன்பர்கள் சிலர் அதில் குளித்து ஆனந்தமடைந்தனர்.

அங்கிருந்து, ''ஸ்ரீ நாராயணகுரு'' என்ற மகானுடைய சமாதி இருக்கின்ற சிவகிரி மடத்திற்குச் சென்றோம். கோவிலுக்குள் பிரவேசிக்கக் கூடாது என்று ஒதுக்கிவைக்கப் பட்டிருந்த ஈழவ சமுதாயத்தை ''ஒன்றேகுலம், ஒருவனே தேவன்'' என்ற தாரக மந்திரத்தை முழங்கச்செய்து, மிகஉயர்ந்த நிலையில் இன்று அவர்கள் இருப்பதற்கு வழி வகுத்தவர் அம் மகான். அவர் 1928ல் சமாதி ஆனார். அவர் சமாதியின் அருகில் மிக அழகான கோவில் ஒன்று எழுப்பி அவருடைய சிலையைப் பிரதிஷ்டை செய்து அதற்குப் பூஜை நடந்துவருகிறது. இதுபோல் கேரளாவில் முக்கியமான ஊர்களிலெல்லாம் அவருடைய சிலைகளையும், அவர் பெயரால் S. N. D. P. என்ற ஸ்தாபனத்தாரால் நடத்தப்படும் உயர்நிலைப்பள்ளிகளையும், கல்லூரிகளையும் காணலாம்.

அங்கிருந்து கொல்லம் வந்து சேர்ந்தோம். எங்கள்பால் அளவற்ற அன்பு கொண்ட அன்பர் ஒருவரின் வீட்டில் நண்பகல் உணவு அருந்தி ஓய்வு எடுத்தோம்.

அங்கிருந்து புறப்பட்டு ''ஒச்சிரை'' என்ற இடத்திலுள்ள ''பரப்பிரமம்'' என்ற ஆலயத்திற்குச் சென்றோம். அங்குப் பெரிய ஆலமரத்தின் அடியில் பலவித விக்ரகங்களை வைத்து வழிபடுகின்றனர். கோவில் என்பது இல்லை. அங்குக் காளைகளை மேளதாளத்துடனும், வெடி முழக்கத்துடனும் ஆலமரத்தைச் சுற்றி ஓட்டிக் கொண்டு வருகின்றனர்.

அங்கிருந்து செங்கன்னூர் என்ற தலத்திற்குப் புறப்பட்டோம். மாலை, செங்கன்னூர் பகவதி ஆலயத்தை வந்தடைந்தோம். இவ்வாலயம் பம்பை ஆற்றின் கரையிலுள்ள பிரசித்திபெற்ற கோவில். ''தேவிக்குத் திருப்பூத்து'' என்ற திருவிழா நடக்கும்பொழுது மிகவும் கோலாகலமாக இருக்கும் என்று சொல்லப்படுகிறது. நாங்கள் தீபாராதனையைக் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தோம். ஒரு பக்கம் பகவதி அம்மன் தரிசனமும் மறுபக்கம் சிவதரிசனமும் கிடைத்தன.

*11—9—78* திங்கள் அதிகாலை ''திருநாக்கரை'' சிவபெருமானுடைய ஆலய தரிசனம் செய்தோம். அங்குப் பிரகாரத்தில் கூட்டுப் பிரார்த்தனையும் செய்தோம்.

7-45 மணிக்கு ஏற்றுமானூர் என்று சொல்லப்படுகிற பெரிய சிவாலய தரிசனம் செய்தோம். சிவலிங்கம் பெரிய அளவில் இருக்கிறது. அர்ச்சனை நடத்தி, பிரகாரத்தில் கூட்டுப் பிரார்த்தனையும் செய்துவிட்டு, 9 மணிக்குக் கடித்திருத்தி என்ற ஊரிலுள்ளசிவ பெருமானை வணங்கினோம். அங்கிருந்து சிறிது தூரம் சென்று வைக்கம் என்ற பிரசித்தி பெற்ற சிவ ஆலயம் வந்துசேர்ந்தோம். அங்குப் பக்த ஜனங்கள் ஏராளமாகத் தரிசனம் செய்ய வந்து போய்க்கொண்டிருந்தனர். அத்துடன்

திருமணம் நடத்துவதற்காகவும் ஜனக்கூட்டம் காத்திருந்தது. கோவில் வட்டவடிவமாக உள்ளது. மேல்கூரை செப்புத்தகடுகளினல் வேயப்பட்டுக் கூம்புபோல் (Conical) உச்சியில் ஒரு செப்புக்கலசம் வைக்கப்பட்டிருக்கிறது. விசால மான கல்தளவரிசையுள்ள பிரகாரங்களுடன், மிகவும் சுத்தமாகக் காட்சி அளித்தது. சிவலிங்கம் பெரிய உருவமுடையதாகப் பிறைஅணியப்பட்ட அலங்காரத்துடன் விளங்கியது. வைக்கத்தப்பன் அல்லது கோலப்பன் என்ற திருநாமத்துடன் சுவாமி அழைக்கப்படுகிறர். கார்த்திகை மாதம் நடைபெறுகிற வைக்கத்து அஷ்டமி திருவிழா தமிழ்நாட்டிலிருந்தும் ஏராளமான பக்தர்களே ஆகர்ஷிக்கிறது. ஜாதி ஒழிப்புப்போராட்டமும், வைக்கம் சத்யாக்ரகமும் இந்த இடத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டன. இங்கு அர்ச்சனே, ஆராதனே, தரிசனம் முடித்துக்கொண்டு, ஒருமைல் தொலேவில் இருக்கும் உதயனுபுரம் என்ற அழகான கோவிலில் ஸ்ரீ முருகப்பெருமான் தரிசனமும் செய்தோம்.

இங்கிருந்து முற்பகல் 11-30 மணி அளவில் பழைய கொச்சி சமஸ்தானத்தின் தலேநகராக இருந்த திருப்பூணித்துரை என்ற ஊரின் அருகில் இருக்கின்ற பிரசித்திபெற்ற ''சோட்டாணிக்கரை'' என்ற ஆலயத்திற்கு வந்தோம். அங்கு ஸ்ரீ லக்ஷ்மி நாராயணன் தரிசனம் செய்தோம்.

கொச்சி கேரளாவின் முக்கிய வியாபாரத் துறைமுகம் ஆகும். மேற்குக் கடற்கரையில் பம்பாய்க்கு அடுத்த ஸ்தானம் ஏற்றுமதி இறக்குமதியில் அது வகிக்கிறது. இங்கிருந்துதான் மிளகு, கயிறு முதலிய சரக்குகள் ஏற்றுமதியாகின்றன. இது இயற்கையாக அமைந்த துறைமுகம். இதற்குப் பக்கத்தில் செயற்கையான ஒரு தீவை ''வெல்லிங்டன் ஐலண்ட்'' என்ற பெயரால் ஏற்படுத்தி அதில் ஆகாய விமானமும், கடற்படை சம்பந்தமான தளங்களும் அமைத்து இருக்கிறர்கள். இத் தீவைக் கொச்சியுடனும், எர்ணுகுளத்துடனும் ரயில், ரஸ்தா பாதைகளால் இணேத்திருக்கிறர்கள்.

இங்கிருந்து கொச்சி துறைமுகம், கப்பல் கட்டும் தளங்கள், விசாலமான ஆகாயவிமான தளங்கள் முதலியவைகளேயும், எர்ணுகுளம் நகரின் எழில் தோற்றத்தையும் கண்டுகளித்துக் கொண்டே மாலே 3-45க்கு ஸ்ரீ ஆதி சங்கரர் ஜன்ம பூமியாகிய காலடி வந்துசேர்ந்தோம். அங்கு மதியம் உணவு அருந்திய பின் சிருங்கேரி மடத்தைச் சேர்ந்த கட்டடத்தில் தங்கினேம். மடத்தின் அருகில் ஓடுகின்ற பெரியாறு என்ற புண்ணிய நதியில் மாலே நீராடினேம். பின் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ இளேய சுவாமிகளால் சமீபத்தில் திறந்து வைக்கப்பட்ட ''சங்கர கீர்த்தி மண்டபம்'' என்ற பெரிய ஸ்தூபியைப் பார்த்தோம். மிகவும் அழகான முறையில் ஆதி சங்கரரின் வாழ்க்கை வரலாறு சிமெண்டினல் வடிக்கப்பெற்று அதன் உள் படிக்கட்டுச் சுவர்களே அலங்கரிக்கின்றது.

ஸ்ரீ ஆதிசங்கராச்சாரியரால் ஸ்தாபிக்கப்பட்ட ஷண்மத வழிபாடுகளுக்குரிய தேவதைகளான, ஸ்ரீ கணபதி, முருகன், சக்தி, சிவன், விஷ்ணு, சூரியன் ஆகிய மூர்த்திகள் வெகு அழகாகக் கீழிருந்து மேலே போகும் ஒவ்வொரு தட்டிலும்ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ ஆதிசங்கரர் தம் நான்கு சிஷ்யர்களுடன் இருக்கும் காட்சியும் தத்ரூபமாக இருக்கிறது.

12—9—78 செவ்வாய்க் காலே 4 மணிக்கு ஸ்ரீ கிருஷ்ணன்கோவில் தரிசனம் முடித்துக் கொண்டு 8-20 மணிக்குக் காலடியிலிருந்து புறப்பட்டு 9-30 மணிக்குக் கிரிஞ்சாலக்குடா என்ற ஸ்தலத்திலுள்ள '' கூடல் மாணிக்கம்'' என்ற கோவிலேவந்தடைந்தோம். இது ஸ்ரீ ராம பிரானின் இளேயோனுகிய ஸ்ரீ பரதாழ்வார் ஆலயம். இந்தியாவில் பரதனுக்குத் தனிக் கோவில் உள்ள இடங்களில் இது சிரேஷ்டமானதாகக் கருதப்படுகிறது. விசாலமான முன் மண்டபங்களுடனும், பெரிய பிரகாரங்களுடனும், பெரிய தெப்பக்குளத்துடனும் இது காட்சி தருகிறது. மூலஸ்தானத்தில்ஸ்ரீ பரதாழ்வார் விக்ரகம்நெடிது உயர்ந்து காணப்படுகிறது. தரிசனம் முடித்துக்கொண்டு, கொடுங்கல்லூர் என்றபிரசித்திபெற்ற பகவதி (காளி) கோவில் வந்தடைந்தோம். அங்குத் தேவிக்கு அர்ச்சனேகளும், வழிபாடுகளும் செய்யும் பக்த ஜனங்களின் கூட்டம் சொல்லிமாளாது. தேவி செந்நிற ஆடையும், செந்நிறப் பூக்கள் அலங்காரத்துடனும் உக்ரமாகத் தோற்றம் அளிக்

கிறுள். அங்கிருந்து திருஅஞ்சைக்களம் என்ற அபூர்வமான சிவஸ்தலம் வந்தடைந்தோம். இத்திருத்தலம், நால்வர்களில் ஒருவரான ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனுரால் பத்துப் பாமாலைகளால் பாடப்பட்டதாகும். இங்குதான் இறைவன் அம்பிகையுடன் எழுந்தருளியிருக்கிறுர். சுவாமி ''அஞ்சைக்களத்தப்பர்'' அம்பாள் உமையம்மை என்ற திருநாமங்களோடு இருக்கிறுர். சேரமாள் பெருமாள் நாயனுரின் வேண்டுகோளுக்கிணங்கி சுந்தரமூர்த்தி நாயனுர் இத்தலத்திற்கு வந்து வழிபட்டுக் கைலை ஏகினுர் என்பர். அவர் வரும்பொழுது தம்முடன் ஸ்ரீ சிவகாமி அம்பாள் சமேதராக இருக்கும் நடராஜப் பெருமானையும் இங்குக் கொண்டு வந்து பூஜை செய்ததாகச் சொல்லப்படுகிறது.

இவ்விடமிருந்து "திருப்பரையார்" என்று அழைக்கப்படும் திருத்தலம் வந்தோம். இங்கு ஸ்ரீ ராமர் எழுந்தருளியிருக்கிறுர். வெள்ளிக் கவசம் அணிந்து மிக்க அலங்காரத்துடன் காட்சி யளிக்கிறுர். அங்குத் தரிசனம் முடிந்ததும் திருச்சூர் என்ற பெரிய நகர் வந்தடைந்தோம். திருச்சூரில் பிரசித்தி பெற்ற "வடக்கநாதன்" என்ற சிவன் கோவில் தரிசனம் செய்தோம். இங்கு நந்தியம்பெருமான் சந்நிதியில் இருந்து சிறிது வடக்கு விலகியிருக்கிறது. சிவலிங்கம் பெரிய திருவுருவம். அவருக்கு எப்பொழுதும் நெய் அபிஷேகம்தான். அபிஷேக நெய் உறைந்து, தலையிலிருந்து வழிந்திருப்பதைக் காணலாம். கோவிலில் இன்னும் பல தெய்வச் சந்நிதிகளையும் வணங்கிவிட்டு, புறநாட்டுக்கரை என்ற இடத்திலிருக்கின்ற ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தையும், அதற்குப் பக்கத்திலிருக்கின்ற சாரதா மந்திரத்தையும், பார்த்து விட்டு இரவு 7-30 மணிக்குப் புகழ்பெற்ற குருவாயூர் என்னும் க்ஷேத்திரம் வந்தடைந்தோம். ''குருவாயூர்'' என்ற ஸ்தலம் மிகவும் புனிதமானது. இங்கே நாராயண பட்டத்திரி என்ற நம்பூதிரி, வாத உபாதையால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தவர் ''நாராயணீயம்''என்ற மஹாவிஷ்ணுவின் பத்து அவதாரப் பெருமைகளைச் சம்ஸ்கிருதத்தில் இயற்றிபூர்ண குணமடைந்தார். அவருடைய திருவுருவம் தாங்கிய பட்டத்தை இன்றும் கோவிலினுள் நுழைந்த உடன் காணலாம். ஏற்கனவே பதிவு செய்திருந்த தேவஸ்தானம் லாட்ஜில் எங்கள் உடைமைகளை வைத்துவிட்டு, குருவாயூரப்பன் என்ற ஸ்ரீ கிருஷ்ணனைக் கண்குளிரத் தரிசித்துவிட்டு இரவு ஓய்வு கொண்டோம்.

13-9-78 வியாழன் அதிகாலை மூன்று மணிக்குத் தரிசனத்திற்குச் சென்றோம். சுவாமிக்கு எண்ணெய் அபிஷேகம் நடந்தது. அன்னப் பிராசனம், துலாபாரம், கல்யாணம், முதலிய பிரார்த்தனைகள் நடந்த வண்ணமாகவே இருக்கின்றன. பிரகாரத்தில் இருந்து பஜனை செய்தோம்.

அங்கிருந்து திருவித்துவக்கோடு என்ற சிவ-விஷ்ணு ஆலயத்திற்குக் காலை 10-15 மணிக்கு வந்து சேர்ந்தோம். இது பாரதப்புழை என்ற பெரியஆற்றின் கரையிலுள்ள கோவில். இதில் சிவனுக்குத் தனி ஆலயமும், விஷ்ணுவுக்குத் தனிஆலயமும்இருக்கின்றன. அர்ஜுனனுல் பிரதிஷ்டை செய்யப்பட்ட விஷ்ணு ஆலயத்தில் அர்ச்சனை செய்து தரிசித்தோம். தவிர தர்மபுத்திரர், நகுல சகாதேவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டதாக உள்ள விஷ்ணு கோவில்களும் பக்கத்தில் இருக்கின்றன. அங்கிருந்து மலம்புழா அணை (Malampuzha Dam) பார்ப்பதற்குப் புறப்பட்டோம்.

மலம்புழா அணைக்கட்டில்,சிறிய மீன்காட்சிச் சாலையையும், அழகிய பூங்காவையும், கடல் போல் பரந்துகிடந்த அணைக்கட்டின் நீர்த் தேக்கத்தின் அழகையும் கண்டுகளித்துவிட்டு இரவு 8-30 மணியளவில் தென்னுட்டின் மான்செஸ்டர் என்று சொல்லும் கோயம்புத்தூர் நகர் வந்தடைந்தோம்.

14—9—78 வியாழன் அதிகாலையில் எழுந்து நீராடிமுடித்து, அங்குத் திருப்பேரூர் ஸ்ரீ பட்டீஸ்வரர், ஸ்ரீ மரகதவல்லி அம்பாள் தரிசனம் செய்தோம்.

சுந்தரமூர்த்திநாயனுராலும், அப்பர் சுவாமிகளாலும், அருணகிரிநாதராலும், பல பக்தர்களாலும் பாடல் பெற்றதலம் இது.

கோவில் நிர்வாக அதிகாரி அன்புடன் எங்களை எல்லாச் சந்நிதிகளுக்கும் அழைத்துச் சென்று தரிசனம் செய்வித்தமைக்கும், இனிய தீங்குரலில் தேவாரம்பாடி மனம் கனிய வைத்த கோவில் ஓதுவார் அவர்களுக்கும்நன்றி

கலந்த வந்தனம் செலுத்திவிட்டு, அங்கிருந்து மருதமலை ஸ்ரீமுருகப்பெருமான் தரிசனத்துக்கு வந்து சேர்ந்தோம்.

"மருதமலை மாமணியே முருகய்யா" என்று பக்தர்களாலும் மற்றவர்களாலும் தமிழ் கூறும் நல்லுலகெல்லாம் இசைக்கப்பெற்றுப் பிரசித்தி அடைந்த திருத்தலமாகிய இங்கே பக்தர் கூட்டம் கணக்கிலடங்கா வண்ணம் பொங்கி வழிந்துகொண்டிருந்தது. அழகே வடிவெடுத்த ஸ்ரீ முருகப்பெருமானைக் கண் குளிரத் தரிசித்து விட்டு, பாம்பாட்டி சித்தர் கோவிலையும், மற்றும் உள்ள தெய்வங்களையும் வழிபட்டோம்.

கோவை தொழிலதிபர் அன்புடன் அளித்த மதிய உணவு உண்டு, அன்னாரவர்களின் தொழிற்சாலையைப் பார்த்துவிட்டு இரவு 9 மணிக்குப் பழனி வந்து ஸ்ரீ தண்டாயுதபாணி விடுதியில் இரவு ஓய்வெடுத்தோம்.

*15-9-78* அதிகாலையில் எழுந்து நீராடி நித்திய அனுஷ்டானங்களை முடித்துக் காலை 6-30 மணிக்கு ஸ்ரீ தண்டாயுதபாணியின் திவ்ய தரிசனம் செய்தோம். பிரகாரத்தில் இருந்து கூட்டுப்பிரார்த்தனை செய்தோம்.

பழனியிலிருந்து கொடைக்கானலுக்குப் புதிதாக அமைந்துள்ள பாதை வழியாகப் பல மலைகளையும் கடந்து, பண்ணைக்காட்டில் அமைந்திருக்கிற ஸ்ரீ ராமகிருஷ்ண ஆஸ்ரமத்தைப் பார்த்துவிட்டுச் சுமார் மாலை 4-30 மணிக்குக் காமயக்கவுண்டன்பட்டி வந்து சேர்ந்தோம். அங்கே மதிய உணவு உண்டு, சிறிது ஓய்வு கொண்டுவிட்டு, தேக்கடி நீர்த்தேக்கத்திற்கு இரவு வந்து சேர்ந்தோம். 8 மணிக்கு இரவு சிற்றுண்டி முடித்து, தேக்கடி ஓய்வு விடுதியில் நித்திரை கொண்டோம்.

*16—9—78* சனி அன்று தேக்கடியில் படகில் பெரியாறு நீர்த்தேக்கத்தில் சென்று சில வன விலங்குகளைக் கண்டோம். அங்கிருந்து காமயக்கவுண்டன்பட்டி சென்று பேருபசாரத்துடன் அன்பர் அளித்த விருந்தை உண்டோம்.

இரவு 8-30 மணிக்கு ஸ்ரீ சங்கர நாராயணர், கோமதி அம்பாள் தரிசனமும், அங்கிருக்கின்ற ஸ்படிக லிங்கத்தையும் கண்டோம். கோவில் பிரகாரத்தில் கூட்டுப் பிரார்த்தனை செய்து, வெற்றிகரமாக முடிந்த புனித ஸ்தல யாத்திரையை மங்களம்பாடி முடித்தோம்.

மலைநாட்டில் உள்ள ஆலயங்களில், தமிழ்நாட்டின் ஆலயங்கள்போன்று உயர்ந்த கோபுரங்களும் அகன்ற மண்டபங்களும் இல்லை. இருந்தாலும் ஆலயங்கள் பெரும்பாலும் வட்ட வடிவங்களில் அமைந்திருக்கின்றன. எல்லா ஆலயங்களையும் மிகவும் தூய்மையாக வைத்திருக்கிறார்கள். வழிபாட்டுக்கு வருகின்ற மக்களும் நீராடிப் புதிய ஆடை அணிந்து சப்தமின்றி மற்றவர்களுடைய தரிசனத்திற்கு இடையூறின்றிப் பக்தியோடு வழிபடுகின்றனர். அவர்கள் வழிபாடு மற்றவர்களுக்குப் பக்தியூட்டும் முறையில் அமைந்துள்ளது. கோயில் அர்ச்சகர்கள் வழிபாட்டுக்கு வருகின்றவர்களுக்கு அன்போடு நல்ல முறையில் தரிசனம் செய்துவைப்பது தமிழ் நாட்டு மக்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. (முற்றும்)

---

## *செய்திகள்*

**நிகழ்பவை:**

*22-12-78* வெள்ளிக்கிழமை யன்று அன்னை ஸ்ரீ சாரதாதேவியாரின் ஜயந்தியை முன்னிட்டு குருகுல மாணவர்கள் இருபத்துநான்கு மணி நேரம் அகண்ட நாமபஜனையும், நண்பகல் ஒரு மணி நேரம் ஐக்கியவணக்கமும் செய்வார்கள்.

டிசம்பர் மாதம் 25ஆம் தேதி திங்கட்கிழமை யன்று பழைய மாணவர்கள் சங்கம் தபோவனத்தில் கூடும். அன்று கிறிஸ்து ஜயந்தியை முன்னிட்டு மாலை 6-30 மணியிலிருந்து 7-15 மணிவரை குருகுல மாணவர்கள் ஐக்கிய வணக்கம் செய்வார்கள்.

மதுரைஜில்லா திருவேடகம் விவேகானந்தகல்லூரியில் *7—1—79* ஞாயிற்றுக் கிழமையன்று மாலை 2-30 மணிமுதல் 5-00 மணிவரை முதலாவது சமய இலக்கியக் கருத்தரங்கு நடைபெறும். அவ்வமயம் **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்** அவர்கள் தலைமையில் மாணிக்கவாசகரின் திருவாசகத்தைப் பற்றி விவேகானந்த கல்லூரி ஆசிரியர்கள் பேசுவார்கள்.

*1979*ஆம் வருடம் ஜனவரிமாதம் 9ஆம் தேதி செவ்வாய்க் கிழமை வைகுண்ட ஏகாதசி. அன்று குருகுல மாணவர்கள் உபவாசமிருந்து இருபத்து நான்கு மணிநேரம் அகண்டநாம பஜனையும், கீதாபாராயணமும் செய்வார்கள்.

---